## OUR COMING OF AGE: "TRIUMPH OF SOUL OVER ENVIRONMENT."

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

'HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.] [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். **21.**] **1914**ஆம் மார்ச்சுமீ, பிரமாதீசஆம் பங்குனிமீ [சஞ்சிகை **12.**


## OUR COMING OF AGE.

*"The Triumph of Soul over Environment."*

### "OUR ASSOCIATION OF HELPERS," OR "BANDS OF HOPE."

*"God helps those who help themselves."*

"I give you the Message of Hope."—*H. I. M. the King-Emperor.*

"There is no intelligent man among us, be his position however low in society and his education however small, that has not a small circle around him, where he can exercise his influence. It is our purpose to appeal to the good instincts of these, to infsue knowledge and information into their minds, to teach them the way to improve themselves, point out to them the latent power for doing good and being useful to others that is lying dormant within them without their knowing it, and thus secure their sympathyand co-operation in the good cause. In the words of a great and wise Journalist: "Who is there among the people who has truth in him, who is no self-seeker, who is no coward and who is capable of honest painstaking effort to help his country?" "For such men—whatever their rank in life or position in society for such men we would seek as for hidden treasures. Our supreme task will be to help to discover good and intelligent men of the above description among the people themselves, where ever and in whatever station of life we can find them, to afford them opportunity of articulate utterance; and to do what we can to make their influence for good potent among their contemperaries."—*Extract from prospectus of the Diffusion of knowledged Agency issued in March* 1892.

"We compel none and will be compelled by none. *Ich dien* (I serve) is our self-chosen motto and we seek help from all those who are willing to help us 'in the noble cause of making people enlightened and healthy."—*Foundet Secretary.*

"The Scheme which you propose......is practicable and will do much good if carried out."—*Sri T. Muthusawmy Aiyar* (our first Master) in March 1892.

"His Excellency the Governor......is in full accord with you...will watch the progress of your Scheme with much interest."—"Priv: Secy's letter dated 17th April 1892.

"I approve entirely of the movement. I shall be glad to become a patron."—H. O. D. Harding Esq., I.C.S. 1892.

"Our personal knowledge of South India stretches over much more than half a century, and we are able to say that there has not in later days been such a healthy movement of the Tamil Mind which all this indicates............." We venture to say to all the brethren of this Tamil Guild that they must cultivate in their great work the spirit of simple earnestness here inculcated."—*Rev. Dr. G. U. Pope of Oxford in the Indian Magazine and Review.*

"No exercise of faculty is better and nobler for a real man than struggling with great thoughts, and labouring to expre s them in such a way that they shall reach the best feelings, and elevate the whole being of their fellow men around them."—*Ibid.*

"The project is an excellant one. There can be no two opinions regarding the necessity and usefulness of an attempt like the one announced." – The Editor of the *Hindu*, 7th April 1892.

"The Magazine is, as a rule, interesting from end to end."—Rev. Dr. G U. Pope.

"Though I know but a little Tamil, still I am able to read and appreciate it."—Corr., in 1911.

"I told the Private Secretary (to the Prince of Wales) (now Lord Knollys) that you were actively interested in the improvement of Sanitation in villages and towns and in Education."—Miss. E. A. Manning, Secry., N.I.A. London.

"Your work is of great importance."—Dr. Paul Carus of Chicago.

"Dr G.U. Pope has mentioned to me the *Vivekachintamani* as an excellent publication." L. C. Innes, I.C.S., retired Judge of the High Court.

"Does not belie the object with which it has been started"—*The Madras Times.*

"Mr. Swaminatha Aiyar is not a mere theorist or essayist; he has done much practical work in the encouragement of vernacular studies through his Diffusion of Knowledge Agency and by means of his excellently conducted periodical the *Vivekachintamani.*"—Mr. H. K. Beauchamp, C.I.E, Editor *Madras Mail.*

"Mr. C. V. Swaminatha Aiyar has been working hard for the diffusion of knowledge and enlightenment among the masses for which special purpose he has maintained an Agency for the past twenty-five years. All this time he has been prominently associated with Vernacular Journalism in the Presidency."—Mr. A. E. Lawson, C.I.E. of the *Madras Mail.*

"I am glad to find you are devoting your time and talents to spiritual investigation. I wish our young friends of the rising generation will devote some portion of their time to such inquiries."—Dewan Bahadur P. Rajaratna Mudaliar, C. I. E., Hon. Secy., N. I. A. Madras Branch.

"I shall never forget the short conversation which I had with you in 1893 in Madras. I was much impressed by your energy and enthusiasm in the noble cause of making people enlightened and healthy. I note with pleasure that since 1900, you have been working in a new direction and that you are able to suppress your mind."—A. Ramachandra Iyer Esq., Chief-Judge, Mysore (Retired.)




## OUR COMING OF AGE.

### The Children's Movement in Madras.

*A Social Function.*

"An interesting social function was gone through on Sunday noon, the 8th instant (March) when the religious ceremony of opening a press to print and publish the Children's Record, the organ of the children's a movement which is now part and parcel of the 'Vivekachintamani' faithfully serving them as a Record of Social Service, social impressions and self-expression was duly performed. Brahmasri M. Aunasawmi Iyer of Tiruvadi, himself a practical printer and great lover of children presided over the religious part of the ceremony performing the Namakarana or spiritually giving the name infusing it with the power of WORD or Pranva Sakti which is the

motive power behind all the working forces of the world. There were a number of little children present gracing the ceremony with their elders. A young Mother with a little cherub of her own in arms handed a gold piece dedicated to the Holy Mother to represent the capital required, while another young Mother with a little boy holding her hand and bearing the holy name Saraswati Bhai gave her heart to the children's cause represented by the little boy holding her hand, and with it the name Sarada to the new enterprise which is to form the centre and nucleus of a Social Service Institute for the training of children in the elevating ideals of Social Service.

The proceedings began with the worship of Vigneswara, the God of Wisdom and hence the remover of all obstacles in the Path of Righteous efforts. The "All India Children's Memorial" 1913-"Instituted in honour of their Excellencies Lord and Lady Hardinge of Penshurst to perpetuate the "Chilldren's Day" in India and the Ideal of Social Service" with the inspiring and inspiriting Motto : "Realization : A great Tesk" (1877-1913)—was consecrated and then worshipped by the children present and their parents of both sexes who bore them company. Nor was the Children's God, the Great Hanooman, the incarnation of Faith and devoted Service, the peerless Messenger of Sri Rama, forgotten. A five-faced picture representing him in the fullness of Faith and Glory was placed in the Altar and the children sang a beautiful hymn of prayer to him which is transcribed below for the information of all the other children whose hearts are united together and at one with the deity in prayer, though their bodies may live scattered throughout the length and breadth of this holy land of Saints, Sages and Rishis. The following is a true translation of the hymn or prayer :—

"Him born of his own mind, whose movements are quick as the motive power of Motion pure abiding in the wind itself.

The conqueror of his mind and the controller of his senses, the Highest among the Wisest, The manifested essence of the conservation of energy in Vayoo,

The Leader or Generalissimo of the infinite play of the faculties of mind, each a legion in tself,

Him the Messengar of Sri Rama, we (the children) praise and in fhe basic principle of his Existence we our refuge take."

The usual ceremony of Ashirvad with the distribution of *pan supari* and offerings to children brought the interesting ceremony to a close."—*From the Madras Dailies.*

---

## OUR COMING OF AGE.

### "ப்ரபுத்தி ஸம்பந்நம்"

அல்லது,

விவேகசிந்தாமணியின் 21-வது அப்தபூர்த்தி.

விவேகசிந்தாமணிக்கு இந்த சஞ்சிகையோடு 21-வது அப்தபூர்த்தி நடக்கிறது. "ப்ரபுத்தி ஸம்பந்நம்" என்றால் கண்திறக்கல் வித்தியென்று அருத்தம். அதைக் கொண்டாட வேண்டி நாம் வீண் ஆடம்பரங்கள் ஒன்றும் செய்யவேண்டியதில்லை. இந்த மார்ச்சுமீ 8உ யன்று மத்தியானம் சென்னை திருமயிலை யில்லஷிதாலயத்துக்குள்ளிருக்கும சிந்தாமணி க்ரஹத்தில் ஒரு விசேஷ உற்சவம் நடந்தது. அப்பொழுது விவேகசிந்தாமணி யரசுக்குத் தாய்ப்பட்டம் வித்திக்க, பாலபோதஸமஷ்டி சேவை ஸாஸனார்த்தம் சொந்தத்தில் ஒரு அச்சாபீஸ் வைக்க சுபமுகூர்த்தத்தில் சங்கல்பம் செய்து துவஜாரோஹணம் செய்யப்பட்டது. பிரஹ்மஸ்ரீ திருவாதி எம். அண்ணாஸாமி ஐயர் அவர்கள் வைதிகஸம்பிரதாயம் தவறாமல் விக்நேசுவரபூஜை செய்து நாமகரண ஸம்ஸ்காரம் செய்து வைத்தார். பசுங்குழவியைக்கையிலேந்தியவளாய் அன்னையாம் பாக்கியம் பெற்ற ஓர் இளமாது ஸ்வர்ணபுஷ்பஸமர்ப்பணார்த்தம் ஒரு ஸவரன் கொடுத்தாள்.

ஸரஸ்வதீபாய் என்னும் திருநாமம்வஹித்த 21-வயதுள்ள இளமாது தன் சிறுபாலன், கை

யைப் பிடித்துக்கொண்டு நிற்க பாலர்களுக் குழைக்கும் சேவையில் தன் தாயன்பு முழுவதையும் செலுத்தி அச்சாபீஸுக்கு ஸாரதா என்கிற நாமகரணமளித்தாள். ஸாரதாமுத்ரை கலையாமல் வீணாநாதமும் வேணுகானமும் சேர்ந்தாப்போல் குழந்தைகள் மழலைச் சொல்லும் தாய்மாரின் கனிமொழியும் மந்திரோச்சாரண சப்தமும் ஒன்று சேர்ந்து ஒலித்தது.

குழந்தைகள் தெய்வமாகிய ஆஞ்சநேயருக்கும் பூஜைநடந்தது. அஞ்சனை புத்திரன் சிறு குழந்தையாயிருக்கும் பொழுது சந்திரசூரியர்களைப் பார்த்து கொம்பில் பழுத்த கனியென்று குதித்தெழும்பி அவைகளை யெட்டிப் பறித்து சொக்காய்ப்பையில் போட்டுக் கொண்டுவிட்டாரென்று ஒரு கதை. உலகமெல்லாம் சந்திர சூரியர்களில்லாமல் இராப்பகலற்றுத் தடுமாறலாயின. தேவர்கள் இந்திரனிடம் போய் முறையிட, தேவேந்திரன் விளையாட்டு விஷமம் செய்த அஞ்சனைகுமாரனைக் கடிந்து கொண்டதுமல்லாமல் கைதுணிந்து கையிலிருந்த வச்சிராயுதத்தால் ஒரு தட்டும் தட்டிவிட்டார். குழந்தை அடிபட்ட ரோஸத்தில் அழுதுகொண்டு தாயாரிடம் சலுகைக்குப்போக, அஞ்சனாதேவி "நான் யாருமற்ற பாவியானேன்: என் குழந்தையை ஒருவன் கைநீட்டி யடித்து விடவும் அக்குழந்தை யழுது கொண்டுவந்துநிற்க, நான் நாதியற்றவளாய்ப் பார்த்துக்கொண்டிருக்கவும் ஆயிற்றே!

"அடித்தாரைச்சொல்லியழு,
ஆக்கினைகள் செய்துவைப்போம்!

என்கிற தாலாட்டுப்பாட்டின் உண்மை என்மட்டில் பொய்யாய்விட்டதே!" யென்று தன் பர்த்தாவாகிய வாயுபகவானை நினைத்து துக்கப்பிரவாகத்தில் மூழ்கினவளாய்ச் சிந்திக்கலானாள்.

உடனே வாயுபகவான் தோன்றி அவளைத் தேற்றவேண்டி, "உன்குறையைச் சொல்: இதோ நிவர்த்திக்கிறேன்" என்று தைரியம் சொல்ல, நடந்ததைச் சொல்லி இந்திரன் கொழுப்பை யடக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டாள். இந்திரன் தேவராஜனாகையால் அவன் அதிகாரத்துக்கு நேர் விரோதம் செய்தால் ராஜத்துரோகம செய்த குற்றம் நேருமென்று இஷ்டவிரோதவைராக்கிய முஷ்டிஸாதனத்தால் தேவர்களையெல்லாம் வழிக்குக் கொண்டுவந்து, "குழந்தையும் தெய்வமும் கொண்டாடுமிடத்தில்" என்கிற பழமொழியை மறந்து தேவேந்திரன் தன் குழந்தையைக் கைநீட்டி யடிக்கத் துணிந்ததன்றி வச்சிராயுதத்தாலும் தீண்டின குற்றத்தின் பலனை எல்லாரும் அனுபவிக்கச் செய்யவேண்டுமென்று உள்ளுக்குள் தீர்மானிக்கலானார்.

"பற்றொன்று பற்றொன்று பவோபவம்
மற்றொன்று மற்றொன்று மனோபவம்!"

என்றபடி தெய்வசிந்தனையில் மனம் ஏகாக்கிரசித்தமாய் தைலதாரைபோல் ஒன்றையே பற்றி நிற்கும். மனோராஜ்யமாகிய வீண்மனோபாவனை கிளைவிட்டுக் கிளைதாவிப்பிடித் தோடும் குரங்குபோல ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றின வண்ணமாய் விஷயப்பற்றில் மூழ்கி சித்த விருத்தியில் சிதறி யோடிடிக்கொண்டிருக்கும்.

வாயுபகவான் தன்குழந்தை யழுததென்று தாய்மனம் புண்ணான அஞ்சனாதேவிக்கு ஆறுதல் கூறி அவளையும் குழந்தையையும் அழைத்துக் கொண்டு (ஹிருதய) குகையினுட் பிரவேசித்து அங்கேயிருந்து வாசிவசம் செய்து யோகஸம்யமத்தில் வாயுதாரணை செய்யலானார். வாயுவை யிழுத்து ஒடுக்க ஒடுக்க அது சிற்றம்பலக் குகையில் "கடுகைத் துளைத்துக் கடலை யடைத்தாப் போல்" அடங்கலாயிற்று. சூரியசந்திரனை யிழந்து அவதிப்பட்ட உலகம் வாயுவினியக்கமின்றி மூச்சுவிடமாட்டாமல் திக்குமுக்காடித் திணறலாயிற்று. வாயுபகவானோ தாரணையோகம் தப்பாமல் வாயுவையிழுக்கிறார். Air pump என்று சொல்லும் வாயு-நிவர்த்தி யந்திரத்தினுட்புறத்திலகப்பட்ட சுண்டெலிக் குஞ்சுபோல் உலகெ

லாம் உயிரொடுங்கி உடலசையாமல்பிரேதமாத் திரமாய் நின்றது. தேவர்களும் வானத்தில் ஓடியாபடித்திரிய வழியின்றி இறக்கையொடிந்த பக்ஷிகள்போல் தவித்தார்கள். இந்த சங்கடம் பொறுக்கமாட்டாமல் எல்லாரும் இந்திரனிடம் போய் முறையிட, தேவேந்திரன் காரணமென்னவென்று விசாரித்தான். விசாரிக்கவும், தான் அஞ்சனபுத்திரனை விஷமம் செய்தானென்று தண்டித்ததனால் தாய் மனம் புண்ணான அஞ்சனாதேவியின் குறை தீர்க்கவென்று வாயுபகவான்" இஷ்டவிரோத வைராக்கியமுஷ்டி சாதனம் செய்து யோகஸம்யமத்திலிருந்து வாயுநிக்ரகம் செய்துவருகிறாரென்று தெரிந்தது. "ஓஹோ! பழிபாவமெல்லாம் நம் தலையிலேயே அல்லவோ விழலாயிற்று" என்று ஓடோடியும் சென்று வாயுபகவான் தபஸிருக்கும் குகைவாசலடைந்து தரிசனமளிக்கவேண்டுமென்று கேட்டார். அவரும் தேவராஜன் தானே நேரில் வந்து கேட்கும் பொழுது தான் அதற்கு விரோதம் சொல்லக்கூடாதென்று அவருக்கு தரிசனம் கொடுத்து அவர் குறையைச்சொல்லக்கேட்டு, "என் குழந்தை அநாதைபோல் அழுதுக்கொண்டு தன் தாயாரிடம் சென்றபொழுது அதைத் தேற்றுவாரில்லாமையால், நான் பிதாசெய்யவேண்டிய கடமையைச் செய்தேனன்றி வேறொன்றுமில்லை" யென்றார். இந்த மட்டும் செய்தது போதும்: குழந்தை விளையாட்டென்று அதைப் பொறுத்துக் கண்டிக்காமல் தண்டித்தது பிசகென்று ஒப்புக்கொள்கிறேன். வாயுநிக்ரகம் செய்வதை நிறுத்தி நீர் வெளிவந்துலாவ வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். "என் பெண்டாட்டி பிள்ளைக்கு மனம் திருப்தியானால் எனக்குக் குறையொன்றுமில்லை" யென்று சொன்னார் வாயுபகவான். அதன்மேல் இந்திரன் முதலாக தேவர்களெல்லாரும் அஞ்சனா தேவியை யடைந்து அவருக்கு முகமன்கூறி அவள் குழந்தைக்கு ஆசீர்வாதம் செய்து வேண்டிய வரன்களை யளித்து அவள் மனம் களிக்கச் செய்தார்கள்.

அஞ்சனாதேவியும் தாய்மனம் விரிந்து சந்தோஷப்படலானாள். வாயுபகவானும் சந்தோஷமென்று வெளிவரலானார். உலகமும் யதாப்பிரகாரம்(எப்போதும்போல்) சஞ்சலத்தில் மூழ்கி சஞ்சரிக்கலாயிற்று. ஹனுமாரும் தேவதைகளுடைய வரப்பிரஸாதங்களெல்லாம் பெற்றவரானார். அதுமுதல் குழந்தைகளைக் கண்டித்தாலும் தண்டிப்பது கூடாதென்று உலகஸம்பிரதாயம் ஏற்பட்டது. ராஜதர்மமும் அப்படியே ஏற்படலாயிற்று. "சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம் பெரியோராகிற் பொறுப்பது கடனே" என்று ஔவையாரும் மூதுரையோதுவாராயினர். "சிறியோர் குற்றம் செய்யார்" என்கிற வியாஜத்தை வைத்துக் கொண்டு மற்றவர்கள் அவரைக் கொண்டு ஜனசமூகத்துக்குத் தீங்கிழைக்கா வண்ணம் "சிறியோர் பெரும்பிழை செய்தனராயிற் பெரியோர் அப்பிழை பொறுத்தலு மரிதே!" யென்று ஓதிவைத்தார் அந்த ஔவையார் தானே.

குழந்தைகள் பேதபாவனையற்றவர்களாதலால், அவர்கள் தீங்கிழைக்கத்தக்கவராகார் என்பது உண்மை. ஆனால் பிறர் அவர்களைக் கொண்டு தீங்கிழைக்கலாமாதலால், அப்படி தம்குழந்தைகள் தீபார்கைப்பட்டுக் கெடாதபடி பாதுகாப்பது பெற்றோர் கடமையாம். அக்கடமையை அவர்கள் செய்யாதொழியில் அதற்காக அரசனாலும் கடவுளாலும் அவர்கள் தண்டிக்கப்படலாவரென்பது திண்ணம். "பண்டமொருபக்கம் பழியொருபக்கம்" என்பது கூடாது. குழந்தைகளெல்லாரும் ஸத்பாத்திரமாவார்கள். அந்தஸ்க் பாத்திரமாகிய பண்டம் துர்வினியோகப்படுத்தப்படாமல் பாதுகாப்பது பெற்றோர் கடமையாம். ஆகையால் ஹனுமார் குரங்கானாலும் குழந்தை (அதாவது) பேதபாவமற்றவர். சந்திர சூரியர்களைக் கனி யென்று தாவிப்பறித்த பொழுது யாருக்கும் அவர் தீங்குநினைத்தாரில்லை. தீங்கு நினைக்காதபொழுது தீங்கு விளைத்தாரென்பது சுத்த அசம்பாவிதம். ஏனெனில்,

சங்கல்பமின்றிச் செயலுண்டாகாது, மன்தி ஞலொன்றை நினைத்து ஸ்திரபுத்தியால் அதை நிலைநாட்டின பின்னரே அது காரியத்தில் .ஸம்பாவிதமாகும். ஆதலால் ஹனுமார் குழந்தைகளுக்கெல்லாம் தெய்வமாவார். அந்த ஹனுமாரை ஸ்தோத்திரம் செய்து ஒரு பெரியவர் பஞ்சமுகிப் பிரஸாதம் பெற்றுப் பாடின ஸ்லோகத்தை குழந்தைகள் மனங்குளிரப்பாடிப் புளகாங்கித மானார்கள். பொழுது வந்திருந்த குழந்தைகளெல்லாம் பாலபோத ஸமஷ்டிசேவை ஸாஸநமாகத் தயார்செய்த "ஈஜநாயகி" படத்தைப் பூஜை செய்து ஹனுமாரை ஸ்தோத்திரம் செய்தார்கள்.

"மனோஜவம், மாருத துல்யவேகம், ஜிதேந்திரியம், புத்திமதாம் வரிஷ்டம், வாதாத்மஜம், வாநரயூத முக்கியம், ஸ்ரீராமதூதம், சரணம் பிரபத்யே!"

என்று எல்லாரும் தொழுது பிரார்த்தித்தார்கள். அதன் உட்கருத்து இது:—"தன் மனோ சக்தியிலிருந்து அதன் ஸ்வஸ்வரூபமாயுதித்தவரும், "ஈனமிலாவானநிறைவாயு"வின் தூய வேகத்துக்கு சமானமான (துரியத்திலும் வேகமான) துரிதசக்தி வாய்ந்தவரும், இந்திரியங்களின் மாயையை வென்றவரும், புத்திமான்களில் முதன்மையானவரும், வாதாத்மகமாய் ஜனித்தவரும், மனோசக்திகளின் கூட்டமாகிய வானரசேனைகளுக்கெல்லாம் தலைவரானவரும், ஸ்ரீராமதூதருமான ஆஞ்சநேய மூர்த்தியின் ஸ்வஸ்வரூபசரணா விந்தமே அடைக்கலமாகப்புகுந்து அவரைத் துதிக்கிறேம். அவரெம்மைத் தம்மோடைக்கியமாக்கி எல்லா ஸம்பத்துக்களையு மளிப்பாராக!"

இப்படியாக விவேகசிந்தாமணியின் 21-வது அப்தபூர்த்தி. உற்சவம் குழந்தைகள் பெற்றோர்கள், ஸத்துக்கள், ஸாதுக்கள் சேர்ந்து வைபவமாகக் கொண்டாடப்பட்டது. இனி பாலபோத ஸமஷ்டிசேவை ஸாதனார்த்தம் விவேக சிந்தாமணித்தாய் தாயன்பு பூரிக்க உழைத்து வருவாளென்பதிற் சந்தேகமில்லை.

---

## THE TRIUMPH OF SOUL OVER ENVIRONMENT.

### Mrs. Henry Fawcet—The Great Woman with the Child-heart.

"In a great sense no life has been more romantic than hers. Her husband whose life she shared to so full an extent, had never the delight of seeing her ; nor did he actually see their brilliant daughter who passed "above the Senior Wrangler" at Cambridge. Mr. Fawcet was fourteen years older than his wife. (He was thirty-three and she was nineteen at the time of their marriage.) His blindness was caused about eight years before the marriage by his father who accidentally shot him. The blow Fawcet bore with singular courage. The very next year he was instrumental in abolishing the foolish restriction against the celibecy of University Fellows at Cambridge. Despite his radical opinions he became Professor of Political Economy there, and on entering politics rose to high office. In his efforts to extend the Post Office Savings Bank, to better the condition of employees, and in the general administrative work he was helped by his wife. A happy home life, active political effort and the education of their brilliant daughter, were the fruits of a marriage apparently tragic in its nature. IT WAS A TRIUMPH OF SOUL OVER ENVIRONMENT.

"I found youth if not in years at least in spirit. A clear open fair complexion and easy carriage—a quiet voice which in conversation is a little rough in its subdued tone ; an alert mind that answers the half-asked question ; a quickness and ease that come to those whose grappling with public affairs is habitual....The brow of the political economist, the eyes of the Mother, the mouth of statecraft: there one has Millicent Garret Fawcet. Her spare time is given to needlework and to music."—Reginald R. Buckley in T. P.'s Weekly.

## குழந்தை-மனம் மாருத ஒரு மதியூக மந்திரியின் சரித்திரம்.

மிஸ்ஸஸ் ஹென்ரி பாஸெட்.

இஷ்ட விரோத வைராக்கிய முஷ்டி சாதனு தீரரான ஸ்ரீ மோஹனதாஸ் கரம் சந்த்ரகாந்தி யினுடைய சரித்திரத்தை யெழுதி விளக்கின பொழுது பூக்சக்தியிலும் (ஜடசக்தி யென்றும் சொல்லுவார்) மனோசக்தி பெரிதென்றும், மனோசக்தியிலும் ஆத்மசக்தி அபாரமான தென்றும் எடுத்துச்சொன்னேன். இப்பொழுது தன்னுடைய மனோபலத்தாலும் ஆத்ம சக்தியினாலும் 19-வயதுப்பெண் இரண்டு கண்ணும் குருடான ஒருநிபுணரை விவாகம்செய்து கொண்டு அவருக்கு உயிர்த் துணையாகவும் உற்ற விடத்திதுதவியாகவு மிருந்து அவர்மேலானபிரவித்தியடைவதற்குக்காரணமாயிருந்த தன்றி, தானும் அவருடைய ஸத்சங்கவிசேஷத்தாலும் ஸ்வபுத்தி விவேகத்தாலும் மஹாமேதாவியாக விளங்கிவரும் ஒரு மாதரசியின் சரித்திரத்தைப்பற்றி விவரித்தெழுதப் போகிறேன். இதை ஆண் பெண் குழந்தைகள் எல்லாரும் நன்ருய் கவனித்து வாசித்துச் சிந்தித்து சிரத்தையோடும் பக்தியோடும் அதன் கருத்தை உட்கொண்டு மனதில்வைத்தொழுகல் வேண்டும்.

மிஸ்ஸஸ் ஹென்ரி பாஸெட் என்பது விவாகப் பெயர்: அவருடை கன்னிப்பெயர் மில்லி ஸென்ட் காரெட். அந்த அம்மாள் பிறந்தவிடமும் புகுந்தவிடம் அவருடைய விவேகவிர்த்திக்கு அனுகூலமாக விருந்தது. அவருடைய சகோதரிகளில் ஒருவர் ஸ்திரீஸ்வதந்திரசங்கத்துக்குக் காரியதரிசியாக விருந்தார். மற்ருெருவர் வைத்திய பரீக்ஷையில் தேறி வைத்தியத் தொழிலில் அமர்ந்திருந்தார். அக்காலத்தில் ஸ்திரீகளுக்கு வைத்தியம் முதலான வித்வத் ஜீவனத்துறைகளில் இறங்கி யுழைக்க அனுமதி கிடைப்பது துர்லபமாயிருந்தது. ஆனாலும் டாக்டர்காரெட் அண்டெர்ஸன் என்னும் இவருடைய சகோதரி அதிகாரிகளோடு மல்லுக்கு நின்று ஸ்ந்நது பெற்று புருஷர்களுக்குச் சரியாக வைத்தியத் தொழில் பயின்று வந்தார். நமது கதாநாயகி தானே தனக்கு 20-வயதாகுமுன் பின்னர் போஸ்ட்மாஸ்டர்ஜெனரல் பதவிக்குவந்த மகாகனம் பொருந்திய மிஸ்டர் ஹென்ரி பாஸெட் அவர்களை விவாகம்செய்து கொண்டார். அவருக்கு 23-வயதாயிருக்கும் பொழுது அவரும் அவருடைய தகப்பனுரும் வேட்டையாடப் போகையில், அவருடைய தகப்பனுர் சுட்ட துப்பாக்கிக்குண்டு தற்செயலாய் அவர் கண்ணில்பட்டு இருகண்களும் பார்வை யிழந்துபோக நேரிட்டது. இந்த தௌர்ப்பாக்கியத்தை அவர் வெகு தீரகுணத்தோடு பொறுத்துக்கொண்டு அதனுல் தனக்குண்டான இடையூறுகளை யெல்லாம் வென்று வித்வத் விற்பன்னராய் விளங்கிவந்தார். 23-வயதிலேயே அவர் ஸர்வகலா சாலையில் படித்துத் தேறிவிட்டார். பிறகு அவர் கேம்ப்ரிட்ஜ் யூனிவர்ஸிடியில் "யூனிவர்ஸிடி பெல்லோ" என்றுசொல்லும் ஒரு அங்கத்தினராகவிருந்து வித்யாபோதம் செய்துவந்தார். அந்த அந்தஸ்திலுள்ளவர்கள் விவாகம் செய்து கொள்வது கூடாதென்று ஒரு நிர்ப்பந்தம் இருந்தது. இவர் அந்தப் பதவியிலிருக்கும் பொழுது விவாகம் செய்துகொண்டு அந்த நிர்ப்பந்தத்தை யொழிக்கப் பாடுபட்டுழைத்து ஒரு வருஷத்தில் அதை நிவர்த்தி செய்து விட்டார். இவர் செல்வநூல் என்றுசொல்லும் வாழ்க்கைச் செட்டு ஸம்பந்தமான அர்த்தசாஸ்திரத்தில்நிபுணர். இவருடைய அபிப்பிராயங்கள் அதிமேலானவையாக விருந்ததால் அப்பொழுது அதிகாரத்திலுள்ள வர்களுடைய அபிப்பிராயத்துக்கு ஒத்ததாகவில்லை. ஆயினும் இவர் இராஜ்ய நிர்வாக தர்மசாஸ்திர நிபுணராயிருந்ததால் அந்தச்சாஸ்திரத்தில்ப்ரொபெஸ்ஸராகவிய மிக்கப் பெற்ருர். பின்னர் சிலகாலம் சென்று இராஜ்யகாரியங்களில் தலையிட்டுழைக்க சீக்கிரம் நல்லபேர் வாங்கி மந்திரிகளில் ஒருவராய் போஸ்ட்மாஸ்டர் ஜெனரல் வேலை பார்த்துவந்

தார். அவர் அரசிறைக்கணக்கு விஷயங்களில் மஹா நிபுணர். இருகண்களின் பார்வையுமின்றி ஒரு தப்புக்கூட விடாமல் கணக்கு விவரங்களை விஸ்தாரமாய் எடுத்துச் சொல்லிப் பேசுவார். தபாலாபீஸ் ஸேவிங்ஸ் பாங்கியை உண்டு பண்ணிப் பிரபலப்படுத்தினவர் இவரே. தபாலாபீஸ் சிப்பந்திகள் நிலைமையைச் சீர்திருத்துவதிலும் இவர் மிகப் பாடுபட்டுழைத்தார். இந்த வேலைகளிலெல்லாம் இவருக்குப் பக்கபலமாயிருந்து கண்ணுக்குக் கண்ணும் உயிருக்கு உயிருமாயிருந்துழைத்து உதவினவர் அவருடைய பத்தினியாம் நமது கதாநாயகியே. அவருக்கு இப்பொழுது வயது சென்றிருந்தாலும் குழந்தை-மனம் மாறவில்லை. தம் கணவருக் குதவியாகவிருக்கத் தாமும் "பொலிடிகல் இகானமி"—இராஜ்ய நிர்வாக அர்த்த சாஸ்திரத்தைப் படித்து அதன் உள்ளுறையான தத்துவங்கள் சிறு குழந்தைகளுக்கும் தெளிவாய் விளங்கும்படி ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிறார். இவருக்கும் இவருடைய கணவருக்கும் பிறந்த பெண்குழந்தையை வெகு நன்றாக வித்யாப்பியாஸம் செய்வித்துத் தேற்றினர். அந்தப் பெண்கொடி காலேஜில் வாசித்தபொழுது கணித சாஸ்திரத்தில் நிபுணராய்த் தேறும் 'ஸீனியர்ராங்க்ளர்'(Senior Wrangler) என்று சொல்லும் வித்வச் சிங்கத்துக்கும் மேலாகத் தேறி யிருந்தார். இது மஹா அபூர்வம். நமது கதாநாயகி 'ஸ்திரீகள் ஸ்வதந்திர' விஷயத்தில் பால்யம் முதற் கொண்டு சிரத்தை யெடுத்துக்கொண்டுழைத்துவருகிறவர். இவருடைய பிரக்கியாதிபெற்ற கணவர் இந்த அம்மாளுடைய அபிப்பிராயத்துக்கு அனுகுணமாகவே யிருந்துதவிவந்தார். இன்றைக்கு 'ஸ்திரீகள்' ஸ்வதந்தர விஷயத்தில் இவர் மதியூகமந்திரியாக விருக்கிறார். மிஸ்ஸஸ் பாஸெட் துரைசானி, 19-வயதுச் சிறுமியாயிருக்கையில் தானே இரு கண்ணும் குருடான ஒரு வித்வானை மனமுவந்து விவாகம் செய்துகொள்ளத் துணிந்தாரென்றேயும் அவர் எண்ணம் அந்தப் புருஷசிங்கத்துக்கு உதவியாயிருந்து அவருக்கு கண்ணுக்குக் கண்ணுயிருந்து உயிருக்குயிராயும் வாழவேண்டுமென்பதே. அவருடைய தைரிய சீலத்தினால் மிஸ்டர் பாஸெட் கண்ணிழந்தவராயினும் கண்ணுள்ளாரினும் மேலாகப் பிரஸித்திபெற்று விளங்கினர். அவருடைய தர்மபத்னிக்குப் பிறந்த குழந்தை வித்தையில் ஸரஸ்வதி யன்னளாய் விளங்கினள். அவர் இன்னும் இருக்கிறார். கணவனுக் குயிர்த்தோழியாயிருந்துழைத்ததன்றி தன் குழந்தையை வெகு சீரும் சவரக்ஷணையுமாக வளர்த்துவந்தார். குதிரையிலிருந்து விழுந்து படுக்கையிலிருக்க வேண்டியபொழுது இரண்டொரு விநோத கதைகள் எழுதியிருக்கிறார். அதோடு இவர் துரைத்தனச்செட்டு என்கிற செல்வநூல் சாஸ்திரம் பயின்று தம் புருஷனுக்கு உதவியாயிருந்ததன்றி பிரதமபாடமாக அதில் ஒரு பாடப்புஸ்தகமும் எழுதியுள்ளார். எவ்வளவு கடின விஷயமானாலும்சொல்லுணர்ந்துசூக்ஷமமறிந்து சொன்னால் குழந்தைகளும் உணரச் சொல்லலாம் என்பது இவருடைய கொள்கை. ஆகவே இவர்செல்வநூலைச் சிறுகுழந்தைகளும் உணரும்படி அர்த்தசாஸ்திர சம்பந்தமான கதைகள் என்று ஒரு சிறு புஸ்தகம் எழுதினர். அது வாசிக்க இனிமையாயிருப்பதோடு விவேகசிந்தாமணியில் "போன்விளை நல்லூர்" என்று வெளிவந்த கதையைப்போல் கேட்போருக்கு மிகவும்ரஸிகமாகவும்ரம்யமாகவுமிருக்கிறது. இவர்1847-வது வருஷம்ஆல்டிபர்க் என்னும் ஊரில் பிறந்தார். ஆகவே இப்பொழுது இவருக்கு 67-வயது ஆய்வருகிறது. மிஸ்ஸஸ் பெஸண்ட் வயதுடையவர். இன்னும் சுறுசுறுப்பாய் வேலைசெய்துழைத்து வருகிறார். இவருடைய குமாரத்தி 'எடியுகேஷனல் ஆபீஸர்ஸ் டிபார்ட்மெண்டில்' 'பரின்ஸிபால் அஸிஸ்டெண்டு' உத்தியோகம் வகித்துவருகிறார்.

இவருடைய ஜீவியசரித்திரத்தின் முக்கியாம்சங்களில் ஸ்திரீகளுக்கு துரைத்தன ஸ்வதந்திரம் கொடுக்க வேண்டுமென்று உழைத்து வருவது ஒன்று. இவர் 20 வயதுப் பெண்ணுயிருக்கையில் கூட இந்த அபிப்பிராயம் கொண்டவராயிருந்தார். இப்பொழுது 67-வயதாகியும் இந்த விஷயத்தில் முன்னின்று அதிக ஊக்கத்தோடுழைத்து வருகிறார். இவருடைய சரித்திர விலாசத்தை மிஸ்டர் ரெஜினல்ட் ஆர். பக்ளி யென்பவர் "T. P'sWeekly" என்னும் பத்திரிகையில் எழுதியிருக்கிறார். அதை 'League of Isis'-'ஸத்தியானந்த விக்ரஹ ஸாதுஸங்க' ஸ்தாபகர்களில் பிரதமஸ்தரான மிஸ்ஸஸ் ப்ரான்ஸில் ஸ்வைனி (Mrs. Francis Swiney) என்பவர் நமக்கு அன்போடு அனுப்பி வைத்ததற்காக அவருக்கு ஹிருதயபூர்வகமாக வந்தனமளிக்கிறோம்.

இன்னும் ஒரு விசேஷம் உண்டு. இதையெழுதுபவர் பாதிப்படிப்புப் படித்து அதைத் தொடர் பிடியபாய்த் தொட்டு முடிப்பதா? இடையில் விட்டுத்தவிப்பதா? என்று சந்தேகமுற்றுத்தயங்கிய பொழுது மிஸ்டர் பாஸெட் அவர்களுடைய தீரத்தையும் அவருடைய பிரலாபத்தையும் சொல்லி அவர் வைத்திய நண்பர் அவரை உற்சாகப்படுத்தினதுண்டு. அந்த பாஸெட் துரையுடைய வாழ்நாளைப் பிரகாசிக்கச்செய்த பெண்மணியின் தீரத்தையும் பெருமையையும் நாம் இது வரையில் அவ்வளவு சவிஸ்தாரமாக அறிந்திலோம். அதை யிப்பொழுது அறிய நேரிட்டது நமக்கு மார்க்கண்டபதவிலித்தித்தது போலாயிற்று. ஏனென்றால் 16 வயதில் நாம் கொண்ட உற்சாகமும் மனோதீரமும் 49 வயதாகி முடியும் இன்றைக்கும் நமக்கு இவருடைய சரித்திரத்தைப்படிக்கும் போது உள்ளமுவந்த ஊறுவதாக விருக்கிறது. "அன்புக்குமுண்டோ அடைக்குந்தாழ்" என்றபடி உள்ளன்பு ஒன்று மட்டும ஹிருதயத்தில் பூரணமாயிருந்தால் ஆண், பெண், முதலாக சேய்மையண்மை, பழமை புதுமை முதலான தேசகால வர்த்தமான பேதங்களும் மாயாவிகாரங்களும் தானேயற்றுவிழுந்து போகின்றன. அந்த உள்ளன்புதானே ஸத்தியானந்த ஸ்வரூபிணி. அந்த திவ்யமங்கள விக்ரஹத்தை ஆவரணசக்தி மூடிக்கொண்டிருக்கிறது. அது ஹிருதய சுத்தியினாலன்றி வேறு விதமாக நீக்கற்பாலதன்று. இந்த ஸத்யானந்த ஸ்வரூப விக்ரஹ ஸாது ஸங்கத்தால் (League of Isis) நாம் எவ்வளவோ சுகிர்தலாபம் பெற்றுள்ளோம். அந்த சுகிர்தலாபத்தை நம்மவர் எல்லாரும் பெற்றனுபவிக்க வேண்டுமென்று அச்சங்கத்தின் தென்னிந்தியாகிளையை நமது ஸமஷ்டி ஸேவை ஸாதன சங்கத் தோடொத்ததாகச் சேர்த்து ஸத்புத்திர ஸந்தானப்பேறு பெறும்பாக்கியம் விரும்புவோர் அனுஷ்டிக்க வேண்டிய ஸதாசார முறையை சமயானுஸாரமாய்ப் பத்திரிகை வாயிலாகவும், நேரில் வந்துகேட்கும் ஆப்தர்களுக்கு உபதேசார்ஹபாத்திரமறிந்துண்மை போதிக்கவுமான வேலைக்குஉதவியாகவிருக்க வுடன்பட்டிருக்கிறோம். இதன் உட்கருத்து எல்லாம் "மெய்யே வெல்லும் பொய்யல்ல" என்பதிலடங்கும். ஆத்மசக்தியே வெல்லும் மாயை மறைக்குமேயன்றி யதைச் சிதைக்காது. இந்த உண்மையையுணர்ந்தவர்கள் உண்மையில் பாக்கியசாலிகளே. மிஸ்ஸஸ் பாஸெட் அப்படிப்பட்ட பாக்கியசாலிகளில் ஒருவர் என்பது நமது மதம்.

---

## THE FORCES OF GRAVITATION.

## பதார்த்தங்கள் தம்முள் நிகழும் முக்கிய ஆகர்ஷணங்கள்.

பூமியி னருகாமையிலுள்ள பொருள்கள் யாவும் பூமையக் கவர்ச்சியி னுட்சிக்குட்பட்டன வாகையால், அவை தரைநோக்கிச் செல்லாது தடுக்கப்படுங்கால் கனமுள்ளனவாய்த் தோன்றுகின்றன வென்றறிந்தோம்.* புல

* 1893-ம் ஞு பிப்ரவரிமாசத்து விவேகசிந்தாமணியில் "மரத்தின்கனி கீழே விழுவதேன்?" என்னும் விஷயத்தைப்பார்க்க,

ன்களாலுணரக்கூடிய பரிமாணமுள்ள பொ
ருள்கள் எல்லாம் எண்ணிறந்த வியாகிருத
அணுக்களின் சேர்க்கை ஆகையால் குறிப்
பிட்ட நிறையுள்ள ஓர்பொருளினிடம் நிக
ழும் பூமைய ஆகர்ஷண சக்தியானது அப்
பொருளிலடங்கிய அணுக்க ளொவ்வொன்
றையுந் தனித்தனியே பூமைய நேராயிழுக்
கும் கவர்ச்சிகளின் தொகுதியெனவிளங்கும்.
அதுபற்றியே ஒருபொருளின் நிறை யதிக
மாக அதன் கனமும் அதிகமாகின்றது. சாதா
ரணவழக்கத்தில் நிறை கனமென்ற பதங்கள்
தூக்கமென்ற ஒரேபொருளின் குறிப்பனவாக
பிரயோகிக்கப் படுகின்றனவாகினும், ஜட
தத்துவ சாஸ்திரிகளின் பரீக்ஷையில், அவை
கள் வெவ்வேறு அர்த்தமுடையனவாயிருக்
கின்றன. ஒருபொருளிலடங்கிய அணுக்க
ளின் தொகுதிக்கு நிறையென்றும், அப்பொ
ருளை பூமி தன் மையத்திற்கு ஆகர்ஷிக்கும்
சக்தியின் வலிமைக்கு கனமென்றும் பெயர்
கூறுவர். கனம் பலகாரணங்களால் மாறுப
டத்தக்கது. ஆனல் நிறையோ, அங்ஙனம் பே
தப்படுவதன்று. கனம் பூமையக்கவர்ச்சியின்
பலாபலத்தால் தீர்மானிக்கப்படும் இலட்ச
ணமாகையால், அது பொருள்களின் உபகு
ணங்களிலொன்று. நிறையோவெனில், ஜடப்
பொருளின் பாவிகத்திற்கும் மனோபாவனைக்
கும் இன்றியமையாததாயிருக்கின்றது.

ஒருபொருள் பூமியின் தரைமீது விழாதி
ருக்க அது எல்லாவிடத்தும் தாங்கப் பெற
அவசியமில்லை. ஊன்றி நடக்கும் கம்புகளை
மத்தியில் ஓர் விரலிலேந்தி நிலை நிறுத்தலா
மென்பது யாவருமறிந்த விஷயம். *தட்டமு
தலியவற்றை நடு மையத்தில் ஒரு விரலால்
கீழே விழாமல் தாங்குவது கண்டிருக்கிறோம்.
ஒரு கட்டிலைக் கீழேவிழாது தூக்கிச் செல்
லுங் கூலிக்காரன் அக்கட்டிலின் மையத்தில்
தாங்கல் கொடுத்தன்றோ தூக்கிச் செல்லு
வான். வேறெவ்விடத்திலாவது தலைகொடுத்
துத்தூக்கினுல், பூமியின் கவர்ச்சிப்பலம் பூரா
வாய்த் தடுக்கப்படாமல், கட்டிலின் ஒருபா
கம் கீழே தாழ்ந்து தூக்குவோனுக்கு அதிக
வருத்தங்கொடுக்கும். இங்ஙனம், சம்பு, தட்
டம், கட்டில் முதலிய ஒழுங்கான வடிவ
முள்ள பொருள்களில் மத்தியமானவோரிடம்
தாங்கப்பெறின், அவைகளை கனமாகத்தோ
ற்றுவிக்கும் பூமையக்கவர்ச்சியினுக்குந்தடுக்
கப்படுகின்றது. அதுபோலவே, எவ்வடிவமு
ள்ளனவா யிருப்பினும், பொருள்கள் எல்லா
வற்றிலும் மத்தியஸ்தலமொன்றை ஏந்திட,
பொருள் முழுவதும் தாங்க லடைந்து பலம்
பெற்றுத் தரைமீதுவிழாதுநிற்கும். அங்ஙனம்
யாதேனுமோரிடத்து அகாரம் பெற்று ஒரு
புறமும் சரியாது சமநிலையாய்ப்பொருள்கள்
நிற்கில், ஆதாரமடைந்த இடத்தைச் சுற்றி
நான்கு பக்கங்களிலும் கனம் சரியாயிருக்க
வேண்டும். ஆகலால், இவ்விடத்திற்கு *கனமத்
தியமென்று பெயர் சொல்லலாம். நானாவித
வடிவங்களும் குணங்களுமுள்ள பொருள்கள்
எல்லாவற்றிலும் கனமத்தியம் ஒன்றுண்டு.
அது பொருள்களின் நடுமையத்திலேயே இரு
க்கவேண்டுமென்பதில்லை. ஒரு பொருளில்
ஒருபாகத்தைவிட வேறொருபாகத்தில் நிறை
யுங் கனமும் அதிகமாயிருந்தால், ஜாஸ்தி கன
முள்ள பக்கத்தினருகுதான் கனமத்தியமிரு
க்கும். அதன்நேராய் யாதேனுமொருபொ
ருள் தாங்கப்பெற்றால், அப்பொருள் நிலைபெ
ற்று தரையில் விழாது நிற்கும். கனமத்தியம்
தாழ்ந்திருக்குமட்டும், பொருள்களின் நிலையும்
உறுதியாயிருக்கும். குன்றுங்குழியுமாயிரு
க்கும்பாதைகளில் அதிக உயரமில்லாத சக்க
ரங்கள் பூட்டிய கால்பண்டி அரைபண்டிகள்
அபாயமின்றி சகஜமாய்ச் செல்ல, உயரமான
ரோதாக்களுள்ள முழுபண்டிகள் ஒழுங்கான
பாதைகளிலும் குடைபண்டி போடுவனவாயி
ருக்குங்காரண மிதுதான். முழு பண்டிகளி
லும், வைக்கோல்கட்டுகளேற்றிவரும் பண்

* தட்டம் = தாலம், கிண்ணம்.

* Centre of gravity.

டிகள், கல்லடிக்கும் பண்டிகளைவிட எவ்வளவோ அலையவும், வழி சற்றுச் சமதளமின்றியிருந்தால் குடிமயக்கத்தில் கால்தரையில் பாவாது நடப்பவன்போல, தள்ளாடித்தடுமாறி விழவும் செய்வது நாம் பலமுறை கண்டிருக்கிறோம். கோபுரம் முதலிய உயர்ந்த கட்டடங்களில், அடியிற்கனமாகவும், உச்சியிற்போகப்போக கனங்குறைத்துங் கட்டுவதின்காரணம், கட்டடத்தின் கனமத்தியம் கூடியமட்டும் கீழே யிருப்பதற்காகத்தான். கனமில்லாத பதார்த்தங்களை அடியிலும் கனமுள்ளனவைகளை உச்சியிலும் வைத்தால் கட்டடம் எளிதிலிடிந்துவிழும். அடிக்கனமுள்ளன ஸ்திரநிலையும், தலைக்கனமுள்ளன உறுதியில்* நிலையும் பெறுகின்றன. தோணியில்போகுங்கால், பலமாய்க் காற்றடித்தால், தோணியிலிருப்பவர் தண்ணீரில் மூழ்க ஆசைகொண்டவரா யிருந்தாலன்றி எழுந்து நிற்கமாட்டார்கள். தோணி கவிழாமலிருப்பதற்கு அவர்களெல்லாம் கீழே படுப்பதே நலம்.

பொருள்கள் ஸ்திரநிலையைப்படைய அவைகளின் கனமத்தியம் கூடியமட்டும் தாழ்ந்தேயிருக்கவேண்டுமென்று மேற்கூறிய திருட்டாந்தங்களாலறியலாம். இதன்றி ஸ்திரநிலைக்கு வேறொரு இலக்கணமுமுண்டு. சுவர், கோபுரம் முதலியன அடிக்கனமாய் கட்டப்படினும், அவைகள் சரிந்திருந்தால், ஊனமுண்டென்கிறோமன்றோ? ஐரோப்பாகண்டத்தில் சில நகரங்களில் வெகுகாலத்திற்கு முன் கட்டப்பட்ட கோபுரங்கள் நெட்டக்குத்திலிருந்து 7 அல்லது 8 அடி விலகியிருப்பினும் சற்றுஞ் சூளின்றி ஸ்திரமாய் நிற்கின்றன. சாதாரணமாய் சாய்ந்திருக்கும் கட்டடங்கள் இலகுவாய் கீழேவிழக்கூடியனவாயிருக்க, இக்கோபுரங்கள் நெட்டக்குத்தாய்க் கட்டப்பட்டாற்போலும் நிலையாய் நிற்கின்றனவே; காரணம் யாதெனில், இக்கோபுரங்களுக்கு விஸ்தீரணமான அடிவாரங்களிருக்கின்றனவாகையால், இவைகளின் கனமத்தியம் இன்னும் அத்திவாரத்திற்குநேரே உயரத் தானிருக்கின்றது. இக்கட்டடங்களின் கனமத்தியத்திலிருந்து தரைக்குச் செங்குத்தாய் வரையப்படும் †அவலம்பரேகையானது அத்திவாரத்தினுள் விழுவதால், கனமத்தியத்திற்குநேராய்த் தாங்கல் கொண்டனவாக, இக்கோபுரங்கள் இன்னும் கீழேவிழாமல் நிற்கின்றன. பொருள்களின் அத்திவாரத்திற்கு நேராயுபரே கனமத்தியமிருக்குமட்டும், பொருள்களின் நிலையும் ஸ்திரமாகவேயிருக்கும்.

உயிரில் பொருள்களுக்கு மாத்திரமன்றி புள், விலங்கு மானிடராகிய உயிருள் பொருள்களுக்கும் கனமத்தியமுண்டு. ஆனால் உயிருள் பொருள்கள் அடிக்கடி தத்தம் நிலைகளை மாற்றுவதால், கனமத்தியம் எப்பொழுதும் ஒரேயிடத்திலிருக்காமல், ஒவ்வொரு நிலைக்கும் அனுசரணையாய் இடம் மாறுகின்றது. நேராய் நிற்பவனொருவன், ஒரு காலால் மாத்திரம் நிற்கக்கருதி வலதுகாலைத் தூக்கினால் அவன்தேகம் இடப்பக்கஞ் சரியவும், இடதுகாலைத்தூக்கினால் தேகம் வலதுபக்கம் சரியவும் செய்வது யாவருக்குமனுபவம். இருகாலுந் தரையில் நிற்கையில், நமது உடலின் கனமத்தியம் இடுப்பின் நடுவிலிருப்பதாய்க் கொள்வோம். ஒருகாலால் நிற்கும்வேளையிலும், அதேயிடத்தே கனமத்தியமிருக்குமானால், அது உடலைத்தாங்கிக்கொண்டிருக்கும் காலுக்கு நேராயில்லாதது நிமித்தம் நாம் கீழேதான் விழவேண்டும். கீழேவிழுவதைத் தடுப்பதற்காகவே, யாதேனு மொருகாலைத் தூக்குங்காலத்தில், நமதுடலை எதிர்ப்பக்கமாய்ச் சாய்த்து நமது கனமத்தியத்தினிருப்பை மாற்றுகின்றோம். ஒரு பாகத்தை யொரு சுவரோடு எட்டிவைத்து, மற்றப்பாதத்தைக் கிளப்பமுடியுமோவென்று பாருங்கள். சுவரிருக்குமிடத்தில் உடல்சரிவதற்கிடையில்லாததினால், நமது முயற்சி பழுதுபோகின்

* உறுதியில் = உறுதியில்லாத.

† Perpendicular line.

றது. முதுகில் மூட்டை ஏந்திய கூலிக்காரன் முன்னே கூனி நிற்பதும், வலதுகையில் தண்ணீர்க்குடந்தாங்கிச் செல்வோன் இடது பக்கத்திற் சாய்ந்து நடப்பதும் பார்த்திருக்கலாம். ஒரு மனிதன் யாதேனுமொரு பாரமேந்தி நிற்கும்பொழுது, அவனது கனமத்தியம் முன்னிருந்த இடத்தைவிட்டு மாறுவதால், அவன் தேகத்திற்கும் ஏந்தியபாரத்திற்கும் பொதுவாகிய கனமத்தியம் அவன் காலடிகளின் மத்தியிலுட்பட்ட தரைக்கு நேராயிருந்தாலன்றி அவன் கீழேவிழுவான்.

இதுகாறும் நாம் பேசிவந்த சர்வவியாபக ஆகர்ஷணசக்தியும் அதன் ஓர் அம்சமாகிய பூமையக் கவர்ச்சியும், பொருள்கள் தம்முள் அதிதூரத்திலும் நிகழக்கூடியன. இவையன்றி அதிக சமீபத்திலிருக்கும் நுட்பமான அணுக்களிடம் சில சூட்சும ஆகர்ஷணங்கள் தோன்றுகின்றன. அவைகளைச்சற்று இங்கு விவரிப்போம். இரும்புக்கட்டி, கல்துண்டு முதலிய கடினமான பதார்த்தங்கள் சுளுவாய் நெகிழவோ உடையவோ வேறுவிதங்களில் சொரூபம் மாறவோ செய்யாது இறுக்கமாயிருப்பதின் காரணமென்ன? பொருள்கள் யாவும் நுண்ணியவணுக்களின் தொகுதியென நாமறிவோம். ஒரு பொருளின் ஒவ்வொரு அணுவும் தனித்தனியாயிராது, அளவற்ற அணுக்கள் சேர்ந்தேயிருப்பதால், அவ்வணுக்கள் தம்முள் சம்போகம்வருத்தும் சக்தியொன் றிருக்கவேண்டும். பூமியின் அருகாமையிலுள்ள பொருள்கள் யாவும், பூமையக் கவர்ச்சிக் குட்பட்டனவாகையால், கல் இரும்பு முதலிய கடின பதார்த்தங்களின் அணுக்களின் சேர்க்கைக்கேதுவாகும் கவர்ச்சியினூக்கம் பூமையக் கவர்ச்சியின்பலத்திற்கு மேற்பட்டதாகவேண்டும். மேலும், அதிக வருத்தத்துடனன்றி வைரமான பொருள்களின் தோற்றத்தைமாற்ற ஏலாததினால், இச்சக்தியின்பலம் அதிகமாகவேயிருக்கவேண்டும். இச்சக்தியில்லாவிடில், பொருள்களெல்லாம்வடிவமொழிந்து அணுத்தூளாகிவிடும். இரண்டணுக்கள்கூடச் சேர்ந்ததாய் ஒரு பதார்த்தமுமிராது. மலைகளெல்லாம் பொடியாய்விடவும், புற்பூண்டு, காய்கிழங்கு, விருட்சம், விலங்கு என்ற வேற்றுமை யுடைய தோற்றங்க ளொன்றுமில்லாமலும் முடியும். மனிதரும் அவர்களது உடலுருப்புகள் யாவுமிழப்பார்கள். உலகெங்கு மலங்கரிக்கும் மனோரஞ்சிதக் காட்சிகளாகிய

"பொய்கையும் வாசப் பொழிலு மெழிலருவிச் செய் குன்று மாறும்"

இலதாகி, அவையிருந்தவிடத்து, ஞானசித்தராகிய நாயனர் கூறியதற்கிணங்க,

"முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமா யப்பாலும் பா ழென்று"

சொல்லும்படி அணுத்தூள்நிறைந்த அடவிதான் காணலாம். ஓரே தன்மையான அணுக்களை ஒன்றோடொன்று இறுகச்சேர்த்து புலன்களாலறியும்படி வடிவமும் பரிமாணமும் பொருள்களுக்களிக்கும் சக்திக்கு *பிண்டீகராகருஷண மெனப் பெயரளிக்கலாம்.

ஜடதத்து வசாஸ்திரரீதியாய் பொருள்கள் நிலம்,[1] நீர்,[2] கால்[3] என மூன்று ஸ்திதிகளுடையன. பொன், வெள்ளி, இரும்பு, கல் லுமுதலிய திண்மையான பொருள்கள் நிலஸ்திதி யுடையன. தண்ணீர், எண்ணெய், பால், இரசம்போன்ற திரவ பதார்த்தங்கள் நீர் நிலையை உடையன. நீராவி, காற்று முதலியனவே கால் என்ற மூன்றாவது ஸ்திதிக்கு உதாரணங்கள். ஒரு பொருளே இம்மூன்று ஸ்திதிகளையும் உடைத்தாயிருப்பது கண்டிருக்கிறோம். திருஷ்டாந்தமாக, தண்ணீர் உறைந்தபனிக்கட்டி அல்லது ஆலாங்கட்டியாகவும், ஜலமாகவும், நீராவியாகவுமிருப்பது பார்த்ததில்லையா? மழைநாள்களில் தேங்காயெண்ணெய் உறைந்திருப்பதும், அதிவெக்கையுள்ள உலையிலிட்ட தங்கம், வெ

* Cohesion.

(1) Solid. (2) Liquid. (3) Gas.

ள்ளி, உருகியிருப்பதும் யாவரு மறிவார்கள். சில வருடங்களுக்குமுன் ஐரோப்பாவில் சில வித்வான்கள் காற்றையும் குறுக்கிக், குறுக்கி உருக்குப்போன்ற ஒரு லோகமாக்கினர்கள். ஆகையால் சாதாரணமாய் ஒரு பொருள் எந்த ஸ்திதியிலிருப்பினும், தகுந்தபடி சிரமப்பட்டால் அதை மற்றிரு ஸ்திதியிலும் வருத்தலாம். மந்திரவாதிகள் தாங்களோட்டும் பிசாசுகளுக்கு முடியாவேலையொன்று கொடுக்கக்கருதி மணலைக் கயிறுய்த்திரித்துவர ஏவலிடுவதாய் கதைகள் சொல்வதுண்டு. அந்தோ! இக்காலத்து சிறுபள்ளிப் பிள்ளைகள்கூட அறிந்திருக்கும்* இரசாயனநூல் விஷயங்களை, இத்தேசத்தில் தொன்றுதொட்டு மாதர்களையும் ஆடவர்களையும் பிடித்துத் திரிவதாய்ச் சொல்லும் பிசாசுகளுமறிந்திலபோலும்! ஏனெனில், ஒட்டப்பட்ட பிசாசு கற்றுணர்ந்ததாயிருந்தால், மணலையுங் கயிறுகத்திரிப்பது அருமை யல்லவென்றறிந்து ஏவியதொழிலை முடித்துத் திரும்பும். நாம் உபயோகித்துவரும் கண்ணாடி சாமான்கள் மணலால் செய்யப்பட்டனவென்றும், கண்ணாடியையுருக்கி வெள்ளிக்கம்பி போன்ற நேர்மையான கம்பிகளாக இழுத்து, அக் கம்பிகளால் கயிறுதிரிக்கலாமென்றும் நீங்கள் ஒருவேளை கேட்டிருக்கலாம். மணலையும் உருக்கி, கம்பியாயிழுத்து, கயிறுய்த்திரிப்பதானால், நிலம், நீர், கால் என்ற ஸ்திதிகளில் யாதேனுமொரு ஸ்திதியிலிருக்கும் பொருளை மற்றிருஸ்திதிகளிலும் வருத்துவது ஏலாததன்று எனக் கொள்ளலாம். இஸ்திதிகளிலொவ்வொன்றின் இலக்கணம் யாதென்று ஒருவாறு ஊகிக்கக்கூடுமாகினும், கூடியமட்டும் வியக்தமாயறிவது நலமாகையால் ஒவ்வொன்றின் இலக்கணத்தையும் இங்கு எடுத்துக்கூறுவாம். உருண்டைவடிவமாகிய பிரங்கிக்குண்டின் உருவத்தையாவது பரிமாணத்தையாவது சற்று மாற்றுவது மெத்த வருத்தமாயிருக்கிறது. தண்ணீரின் வடிவத்தை அதை வார்க்கும் பாத்திரத்தின் வடிவத்திற்கிணங்க இலகுவாய் மாற்றலாமாயினும், அதன் பரிமாணத்தை மாற்றுவது இலேசல்ல. ஒரு படிஜலத்தை முக்காலே மூன்றுவீசம்படி பிடிக்கும்பாத்திரத்தில் அடைப்பது சாத்தியமன்று. காற்று, ஜலத்தைப்போல அது அடங்கியிருக்கும் பாத்திரத்தின் வடிவத்தை இலகுவாய்த் வகிதுக்கொள்வதுடன், அப்பாத்திரத்தின் பரிமாணத்தையும் பெறும். காற்று சற்றும் வருத்தமன்றி பரிமாணத்தில் விரியவும் சுருங்கவும் செய்யும். ஆக, வடிவவேற்றுமை, பரிமாணவேற்றுமை இரண்டையும் எதிர்க்குங்குணமுள்ள பொருள்கள் நிலத்தன்மையுள்ளனவும், பரிமாண வேற்றுமையைமாத்திரம் தடுக்குங்குணமுள்ளன நீர்நிலையுள்ளனவும், இரு வேற்றுமைகளையும் எதிர்க்காத பொருள்கள் கால் ஸ்திதியுள்ளனவுமாகின்றன.

நிலஸ்திதியுள்ள பொருள்களில் பிண்டீகராகருஷணம் அதிகமாய்ப்புலப்படவும், பொருள்களுக்கு நெகிழ்ச்சி அதிகமாக, பிண்டீகராகருஷணத்தின் வலிமைகுறையவும் செய்கின்றது. நீர்போன்ற திரவப்பதார்த்தங்கள் அதிகமாயிருந்தால், அவைகளின் அணுக்களைப் பிண்டமாகத்திரட்டும் சக்தி பூமியக்கவர்ச்சியின் வலிமையைத்தடுக்க பலமற்றதாயிருக்க அணுக்கள் சிதறிப்போகின்றன. அதுபற்றியே பேரளவுள்ள நீர்ப்பொருள் ஒன்றுக்கும் சொந்தவடிவமில்லை. ஆனல், நீர்ப்பொருள்களின் அணுக்கள் தம்முள் பிண்டீகராகருஷணம் சொல்பமுண்டென்பதற்கு திருஷ்டாந்தமாய், வாழையிலையில் அல்லது தாமரையிலையில் ஜலம் தெளித்தால், ஜலத்துளிகள் உருண்டு இலையெங்கும் சிதறியிருப்பதும், இரசத்தைக் கீழேவிட அது உடனே சிறிய உருண்டையின் துளிகளாய் ஓடுவதுங்காண்க. இச்சிறுதுளிகளின் அணுக்கள் பிண்டீகராகருஷண சக்தியால் ஒன்றேடொன்று இணைக்

* Chemistry.

கப்பட்டு சிதறுமலிருக்கின்றன. ஒரே தன்மையான அணுக்களை ஒன்றோடொன்று சேர்த்து பொருள்களுக்கு உருவளிக்கும் சக்திக்கு பிண்டீகரமென்றோம். இதன்றி வேற்றுமையான அணுக்கள் ஒன்றோடொன்று பற்றியிருப்பதுமுண்டு. ஒரு பொருள் வேறொரு பொருளுடன் ஒட்டும்படி செய்யும் சக்திக்கு * இசைவுஎனப் பெயர்சொல்லலாம். இச்சக்தியினாலேதான் கட்டடங்களில் செங்கலுடன் சாந்து ஒட்டுகின்றது. சேற்றுநிலத்தில் நடக்கையில் கீழேவைத்த காலை உயர்த்துவது எவ்வளவு வருத்தமென்பது உங்களுக்குத் தெரியுமே. தரையில் கொஞ்சந் தண்ணீர்தெளித்து அதன்மேல் போசனம் அருந்த இலையிட்டால், அவ்விலை தரையோடு ஒட்டுவது பார்த்ததில்லையா. வாழைக்குருத்துகளிரண்டை நீரில் அமுக்கி ஒன்றோடொன்று ஒன்றவைத்தால் அவை யெப்படிப்பொருந்துகின்றன பாருங்கள். ஒப்பமாய்த்தேய்த்த இரண்டு கண்ணாடித் தகடுகளை ஒன்றோடொன்று அழுத்தமாய் நெருக்கிப் பின்னர் தகடுகளை வேறாக்கினால் இசைவு சக்தியின் வலிமையை ஒருவாறு தெரிந்துகொள்ளலாம். பொருள்களை ஒன்றோடொனறு ஒட்டுவதும், பொடிவைத்து விளக்குவதும் இசைவு சக்தியின் வலிமையினாலேதான். முகம்பார்க்கும் கண்ணாடிகளுக்கு இரசம் தேய்த்திருப்பது நீங்கள் கண்டிருப்பீர்களே. இசைவுசக்தியின் வலிமைபற்றியே இரசம் கீழேவிழாமல் கண்ணாடித் தகடின்மேல் ஒட்டிக்கொண்டிருக்கிறது. ஒரு ஓலையைத் தண்ணீரில் அமுக்கி வெளியிலெடுத்தால், அதன் நுனியில் ஜலத்துளியொன்று தொங்குவது காணலாம். இத்துளி தன் கனத்தால் கீழே விழமுயல, அதைத் தடுத்து ஓலையின் நுனியிலொட்டிக்கொண்டிருக்கும்படி செய்யும் சக்தி இசைவு சக்திதான்.

பிண்டீகரமும், இசைவும் வியாகிருத அணுக்கள் தம்முள் நிகழும் சக்திகளாம். ஒவ்வொரு பொருளின் ஒவ்வொரு வியாகிருத அணுவும், பாகிக்கக்கூடாத அதிநுட்பமான அவ்வியாகிருத அணுக்களால் சேர்க்கப்படுகின்றது. வியாகிருத அணுக்களே கண்களாலும், *சிற்றுருவிளக்கும் பூதக்கண்ணாடிகளாலும், காண முடியாவெனின், அவைகளிலும் நுட்பமாகிய அவ்வியாகிருதவணுக்கள் கண்களுக்குப் புலப்படாவென்று விசேஷமாய்ச் சொல்லவேண்டியதில்லை. மேற்கூறிய சூட்சும ஆகர்ஷணங்களிரண்டும் அணுக்களின் கட்டை பேதிக்காமல், அவைகள் ஒன்றோடொன்று சேர்ந்திருக்க மாத்திரம் செய்கின்றன. இனி விசாரணைக்காக நிற்கும் † பௌதிகாகருஷணமானது வெவ்வேறு சுபாவங்களுள்ள இருபொருள்களுக்கு சம்போகம் உண்டாக, அப்பொருள்களின் அணுக்கள் கட்டையழித்து, புதிதாய்த் திரட்டி விசேஷ குணங்களமைந்த நூதனமான பதார்த்தம் ஒன்றை நிர்மிக்கும். விளக்கு எரிவதிலும் இரும்புதுருவடைவதிலும் இச்சக்தி புலப்படுகினறது. இதனிலக்கணங்களைப் பின்னால் விவரிப்போம். இப்பொழுது முன் கூறியவைகளைத் தொகுத்துச்சொல்லி தற்காலமெடுத்துக்கொண்ட விஷயத்தை நிறுத்துவாம்.

பதார்த்தங்கள் தம்முள் நிகழும் முக்கியாகருஷண சக்திகளாவன:

A. பொருள்கள் தம்முள் தூரத்திலும் நிகழக்கூடிய சக்திகள் இவை:—

1. சர்வவியாபக ஆகர்ஷணம்—இதுதான் பூமி, சுக்கிரன், புதன் முதலிய நவக்கிரகங்களை சூரியனைச் சுற்றிப்போகச் செய்வது.

2. பூமையக் கவர்ச்சி.

இதுவே பூமியின்கண்ணுள்ள பொருள்களைக் கீழேயிழுப்பதும், அவைகளுக்கு கனம் கொடுப்பதும்.

* Adhesion.

* Microscope.

† Chemical Affinity.

B. அதிக சமீபத்தில் நிகழும் சக்திகள் இவை:-

3. பிண்டீகராகருஷணம். (Cohesion)

இதுதான் ஒருபொருளின் வியாகிருதவ ணுக்களைச் சிதறவொட்டாமலிழுத்து, அப் பொருளுக்கு உருவங்கொடுக்கின்றது. இது ஒரேபொருளின் அணுக்கள் தம்முள் நிகழும்.

4. இசைவு. (Adhesion)

இது இருபொருள்களின் அணுக்களை ஒன்றோடொன்று ஒட்டச்செய்வது. இச்சக் தியில் சேர்க்கப்பட்ட இருபொருள்களும் தத்தமக்குறிய குணங்களை மாறாது வைத்துக் கொள்ளுகின்றன.

5. பௌதிகாகருஷணம். (Chemical affinity)

இது வெவ்வேறு சுபாவங்களுள்ள இரு பொருள்களின் அணுக்களை அவைகளின் கட்டழியச்சேர்த்து நூதனகுணங்களுள்ள புதியபொருளொன்றைக் கொடுக்கின்றது.

---

## CEYLON.

## இலங்கை.

இலங்கை இந்தியாவிற்குத் தெற்கேயுள்ள ஒரு தீவு. அது சிங்களத்துவீபம் எனவும், ஈழமண்டலம் எனவும், ஈழநாடு எனவும் பெயர் பெறும். ஈழம் என்பது இலங்கையில் ஆதியில் பேசப்பட்ட பழைய சிங்களப்பாஷை யின். பெயர்; ஆகவே ஈழநாடென்பதற்குச் சிங்கள நாடு என்பது பொருள். இராமாய ணத்தில் இராவணன் அரசாண்ட நகரமென் றும் சீதையைச் சிறைவைத்த இடமென்றும் சொல்லப்படுவது இதுவே. இலங்கை இந்தி யாவிலிருந்து 60 மைல் தூரத்திலுளது; அது இந்தியாவோடு மன்னார்த் தீவினாலும் சேது வென்னும் ஒரு மணன் மேட்டினாலும் இரா மேசுரத்தீவினாலும் ஒருவாறு தொடுக்கப்பட் டிருக்கின்றது. இராமேசுரம் இந்தியாவை அடுத் தும் மன்னார் இலங்கையை அடுத்தும் இருக் கின்றன; இவ்விரண்டிற்கும் இடையிலுள் ளது மணன்மேடு. இம்மூன்றும் சேர்ந்ததே சீதை சிறைமீட்கச் சென்ற இராமர் சுக்ரீவன் முதலிய வானரவீரர்கள் உதவியைக்கொண்டு கட்டியசேது என்று சொல்லப்படுவது. இரா மேசுரத்தை இந்தியாவினின்றும் பிரிப்பது பாம்பன் கால்வாய். இந்தியாவிற்கும் இலங் கைக்கும்இடையிலுள்ள தூரம் 60மைல்என்று சொன்னோமாயினும் இலங்கையின் வடக்கு யாழ்ப்பாணத்தின் தலையிலுள்ள காங்கேயன் துறைக்கும், தென்னிந்தியா தஞ்சாவூர் ஜில்லா வேதாரணியத்திற்குத் தெற்கேயுள்ள கோடிக் கரைக்கும் இடையிலுள்ள தூரம் ஆக 37 மைல் என்றே உணர்க. நல்ல காற்றுள்ள காலத்தில் கோடிக்கரையிலிருந்து காலை எட் டொன்பது மணிக்குப் புறப்படும் படவு மத் தியந் திரும்பி இரண்டு மூன்று மணிக்குக் காங்கேயன்றுறை ஓடிச்செல்லும்.

இலங்கை சென்னையிலிருந்து 250 மைல் தூரத்திலும், பம்பாயிலிருந்து 900 மைல் தூரத்திலும், கல்கத்தாவிலிருந்து 1,000 மைல் தூரத்திலும்,இங்கிலாந்திலிருந்து 6,000 மைல் தூரத்திலும் இருக்கின்றது. (மைல் என்பது அங்கிலேய நீட்டலளவைப் பெயர்; அது தெருவின்பக்கத்தில் அளவை அறிகுறியாக நாட்டப்படும் கல்லையுங்கட்டையையும் நோக் கிப் பெரும்பான்மை கல் என்றும் சிறுபான் மை கட்டை என்றும் தமிழில் வழங்கப் படும்.)

இலங்கை வடிவத்தினால் மாங்காயை ஒரு வாறு ஒத்திருக்கும். அதன் பெருநீளம் வடக் குத் தெற்கு 271 மைல்; பேரகலம் கிழக்கு மேற்கு 137 மைல்; சுற்றளவு 760 மைல், உட்பரப்பு 25,364 சதுரமைல். இலங்கைதென் னிந்தியாவிலுள்ள மைசூரிராச் சியத்தினும் 2,042 சதுரமைல் குறைவுள்ளது; மைசூரின் உட்பரப்பு 27,406 சதுரமைல்.

இலங்கை ஆதியில் ஆரிய வரசர்களாலும்

தமிழவரசர்களாலும் ஆளப்பட்டுவந்தது. அக்காலத்தில் அதனோடு உரோமரும், பாரசிகரும், அரபியரும் வியாபாரஞ்செய்து வந்தார்கள். கி. பி. 1505-ம் வருஷத்திலே போர்த்துக்கீசர் வந்து இலங்கையின் தெற்கிலும் மேற்கிலும் சிலபாகங்களைக் கைக்கொண்டு குடியேறி 1518-ம் வருஷத்திலே கரையோரத்திலுள்ள நாடுகளைத் தம்வசமாக்கினார்கள். உலாந்தாக்காரர் 1658-ம் வருஷத்திலே போர்துக்கீசரை வெற்றிக்கொண்டு அவர்கள் ஆண்டநாடுகளைத் தம்வசப்படுத்தி அரசு செய்பத் தலைப்பட்டார்கள். இங்கிலீசுகாரர், இலங்கையில் உலாந்தாக்காரர் முதலிய பிற தேசத்தவர்கள் ஆளுகைக்குட்பட்டிருந்த நாடுகளையெல்லாம் 1796-ம் ஆண்டு கைப்பற்றிச் சென்னை இராஜதானியோடு சேர்த்தார்கள். பின்னர் 1798-ம் வருஷத்தில் இலங்கை சென்னை இராஜதானியிலிருந்து பிரிக்கப்பட்டு ஒரு தனி இராச்யமாகச் செய்யப்பட்டது. அதன்பின் 1815-ம் வருஷத்தில் இங்கிலீசுகாரர், ஸ்ரீவர்த்தனபுரமென்னுங் கண்டிநகரத்திலிருந்து அரசாண்ட ஸ்ரீவிக்கிரமராசசிங்கன் என்னும் நாயக்கவரசன்மேற் படையெடுத்துச் சென்று அரசனைப் பிடித்துச் சிறைப்படுத்தினராக இலங்கை முழுவதும் அவர்கள் கைக்கீழாயது. ஸ்ரீவிக்கிரமராசசிங்கன் வட ஆற்காட்டிலுள்ள வேலூரிற் கொண்டுவந்து சிறைவைக்கப்பட்டு 1832-ம் ஆண்டு மரணமடைந்தனன். இவன் வமிசத்தார் இப்போதும் வடஆற்காடு. தஞ்சாவூர், மதுரை முதலிய இடங்களில் இலங்கை அரசாட்சியாரிடமிருந்து உபகாரசம்பளம் பெற்றுக்கொண்டு வசிக்கின்றார்கள்.

அரசியல்:—இலங்கையின் அரசியல், 1831-ம் ஆு ஏப்பிரல் மீ அங்கிலேயதேயத்தரசர் கொடுத்த அதிகாரப் பத்திரத்தின்படியும், 1833-ம் ஆு மார்ச்சு மீ கொடுத்த கட்டளைப்படியும் அமைந்துள்ளது. இந்த உத்தரவுகளின்படி இலங்கையின் அரசு, அதன் வினை செய்வாராகிய ஐந்து உத்தியோகஸ்தர் கூடிய ஓரதிகார சபையின் உதவியோடு இங்கிலாந்து மன்னரால் நியமிக்கப்பட்ட ஒரு தேசாதிபதியினால் நடாத்தப்படுகின்றது. அதிகார சபையிலுள்ளவர்கள் சேனைத்தலைவரும், கலோனியல் செக்ரிட்டேரியும் (Colonial Secretary), அட்டர்ணி ஜெனரலும் (Attorney-General), டிரசறரும் (Treasurer), ஆடிற்றர் ஜெனரலும் (Auditor-General). (இப்பொழுது சுதேச மெம்பர் ஒருவரும் சேர்த்திருக்கிறார்கள். இதுவன்றிச் சட்ட நிருபணச் சபையும் ஒன்றுளது; அது மேற்கூறிய அதிகார சபையிலுள்ள ஐவரோடுவேறும் நாலு அரசாட்சி உத்தியோகஸ்தர்களும் ஜனங்களின் பிரதிநிதிகளாகிய அரசாட்சி உத்தியோகஸ்தரல்லாத எண்மரும் கூடியது. (எலெக்ஷன் முறை நூதனமாக வழக்கத்தில் வந்திருக்கிறது) தேசாதிபதிக்கு ஒரு வருஷத்தில் 80,000 ரூபாவும் அவர் காரியதரிசிக்கு (Colonial Secretary) 24,000 ரூபாவும் சம்பளம்.

அரசுமுறை நடாத்துவதற்காக இலங்கை ஒன்பது மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. மாகாணமென்பது தென்னிந்தியாவிலுள்ள ஜில்லாவிற்குச் சரி. ஒவ்வொருமாகாணமும் ஒரு கவர்ன்மெண்ட்ஏஜன்டு (Government Agents) பொறுப்பில் இருக்கின்றது. அவரும் அவருடைய உதவியாளராய அசிஸ்டன்டேசண்டு மாரும் (Assistant Agents) அவர்களுக்கு கீழ்ப்பட்ட கிராமத்தலைவர்களுமே(Headmen)அரசாட்சியாருக்கும் குடிகளுக்கு மிடையில் சமாசார போக்குவரவிற்கு வாயிலாகவுள்ளவர்கள். முக்கிய ஊர்ச்சுக விசாரணையின் பொருட்டு இலங்கையில் மூன்று முனிஸிபாலிட்டியும் பதின் மூன்று லோக்கல் போர்ட்டும் தாபிக்கப்பட்டுள்ளன,

இலங்கையின் மாகாணங்களின் பெயரும், பிரதானபட்டணமும்; உட்பரப்பின் அளவும், குடிஜனத்தொகையும் வருமாறு:—

| மாகாணம். | சதுரமைல். | குடிஜனம் 1891-ம்ஞு. | சதுரமைல் ஒன்றுக்குக் குடிஜனம். | பிரதானபட்டணம். |
|---|---|---|---|---|
| வடமாகாணம் ... | 3,171 | 319,193 | 101 | யாழ்ப்பாணம். |
| தென்மாகாணம் ... | 1,980 | 489,761 | 247 | காலி. |
| கீழ்மாகாணம் ... | 3,657 | 148,727 | 41 | மட்டக்களப்பு. |
| மேன்மாகாணம் ... | 1,371 | 763,187 | 565 | கொழும்பு. |
| வடமேற்குமாகாணம் ... | 3,024 | 320,032 | 106 | குருநாக்கல் |
| மத்தியமாகாணம் ... | 2,304 | 474,487 | 205 | கண்டி. |
| வடமத்தியமாகாணம் ... | 4,047 | 75,319 | 19 | அநுராசபுரம். |
| ஊவாமாகாணம் ... | 3,725 | 159,155 | 43 | வதுளே. |
| சப்பிரகாமமாகாணம் ... | 2,085 | 258,605 | 102 | இரத்தினபுரம். |
| | 25,364 | 3008,467 | 118 | |

மத்தியமாகாணத்திலிருந்து 1886-ம்வருஷத்தில் ஊவா மாகாணமும், மேன்மாகாணத்திலிருந்து 1889-ம் வருஷத்தில் சப்பிரகாம மாகாணமும் பிரித்து வேறு செய்யப்பட்டன.

இலங்கையின் முக்கியமானபட்டணங்களில், 1891-ம் வருஷத்துக் குடிஜனக்கணக்கின்படி, கொழும்பின் குடிஜனத்தொகை, 126,926; கண்டி, 20,252; காலி, 35,505; திருக்கோணமலே, 11,411; யாழ்ப்பாணம், 43,092.

மேற்கூறிய குடிசனக் கணக்கின்படி இலங்கையில் 6,068 ஐரோப்பியரும்; 21,231 ஐரோப்பிய வமிசத்தாரும், 2,041,158 சிங்களவரும், 723,853 தமிழரும், 216,156 மற்றைச்சாதியினரும்—சோனகர், மலயர், வேடர்—இருக்கின்றார்கள். 6,068 ஐரோப்பியரில் 1885 பேர் ஐரோப்பியசேனையாட்கள்.

இன்னும் மேற்கூறிய கணக்கின்படி, இலங்கையில் 845,149 பேருக்குப் பயிர்ச்செய்கையும், 102,760 பேருக்குக் கைத்தொழிலும், 121,279 பேருக்கு வாணிகமும் முயற்சி.

[1911ஞு எடுத்தகுடிஜனத்தொகைக் கணக்கு அவசரத்துக்கு அகப்படவில்லையால் அதற்குமுன் எடுத்த கணக்கையே உபயோகிக்கலானோம்.]

இலங்கையின் குடிஜனத்தொகை மேற்கண்டபடி 3,080,466; அது சதுரமைல் ஒன்றுக்குச் சராசரி 118 பேர் ஆகின்றது. மேலே உட்பரப்பின் அளவிற்கு ஒருவாறு சமமாக எடுத்துக்காட்டப்பட்ட மைசூரின் குடிஜனத்தொகை 49,43,604; அங்கே சதுரமைல் ஒன்றுக்குக் குடிஜனம் 177.

நீதிவிசாரணை:-நீதிவிசாரணைசுப்பிறீம் கோடு, டிஸ்திரிக்கோடு, பொலிஸ்கோடு, றிக்குவஸ்துக்கோடு என்னுங்கோடுகளினலே செய்யப்படும்.

சுப்றீங்கோட்டில் பெருங்குற்றங்களும் அப்பீல் வழக்குக்களும் விசாரணை செய்யப்படும். பெருங்குற்றங்களெல்லாம் ஜூரிமார் என்னப்படும் மத்தியஸ்தர் பன்னிருவர் முன்னிலையில் விளங்கப்படும். குற்றமேற்றப் பட்டவர்களை ஜூரிமார் குற்றமுடையவர்களென்று கண்டாலன்றித் தண்டனை செய்யப்படமாட்டாது. மரணதண்டம் விதிப்பதற்குச் சுப்பிறீங் கோட்டு நீதிபதிகளுக்குத்தான் அதிகாரமுளது; அவர் விதித்த தண்டமும் கவர்னர் கட்டளையின்றி நிறைவேறாது. சுப்பிறீங்கோட்டு நீதிபதிகள் மூவர்.

டிஸ்திரிக் கோட்டிலே நிலமுதலியவற்றைப் பற்றிய சிவில் வழக்குக்களும் பெருங்குற்றங்

களைப்பற்றிய கிரிமினல் வழக்குக்களும் விசாரணை செய்யப்படும். போலீஸ்கோட்டிலே சிறு குற்றங்களைப்பற்றிய கிரிமினல் வியாச்சியங்களும், டிக்குவஸ்துக்கோட்டிலே சிறுகடன் வியாச்சியங்களும் விசாரிக்கப்படும். இந்தக் கோட்டுகளின் தீர்ப்புகளுக்கெதிராகச் சுப்பிரீங்கோட்டுக்கு அப்பீல் உண்டு.

கல்வி:—வித்தியா விசாரணைக்காக டைரக்டர் அவ் பப்பிளிக் இன்ஸ்றக்ஷன் (Director of Public Instruction) என்னும் ஒருதலைவரை நியமித்து அவருக்குக்கீழ் இன்ஸ்பெக்டர்களையும் ஏற்படுத்திய நாள் முதலாக இலங்கையில் கல்வி வளர்ந்து வருகின்றது. அங்கே 1891-ம் ஆண்டு 4052 பள்ளிக்கூடங்கள் இருந்தன; அவற்றில் 153,843 மாணுக்கர்கள் வாசித்துக்கொண்டிருந்தார்கள். இதனால் 1891-ம் ஆண்டு கணக்கிட்டகுடிஜனத்தொகையில்நூற்றுக்கு ஐந்துபேர் கல்விகற்பதாகத் தெரிகின்றது. சென்ற 20-வருஷங்களில் விருத்தியதிகம்.

இந்தப்பள்ளிக்கூடங்களுள் அரசாட்சிவித்தியாசாலை 436; அரசாட்சியாரிடத்து உதவிப் பணம்பெற்று நடத்தப்படும் வித்தியாசாலை 971; உதவிப் பணம்பெறாத வித்தியாசாலை 2,645, இவற்றால் முறையே 41,746; 74,855; 37,242 மாணுக்கர்கள் கல்வி கற்றார்கள். இலங்கை அரசாட்சியார் 1891-ம் ஆண்டு கல்வியின் பொருட்டுச் செலவழித்தபணம் ரூபா 508,166. இந்தப்பணம் பெரும்பான்மை சுவபாஷை கற்பிக்கும் பள்ளிக்கூடங்களுக்காகவே செலவழிக்கப்பட்டது. இங்கிலீஷ் வித்தியாசாலைகள் படிப்படியாய் அவற்றின் வருமானத்தைக் கொண்டே நடத்தத்தக்கவைகளாய் வர, சுவபாஷை வித்தியாசாலைகள் வருமானத்தைக்கொண்டே நடை பெறமாட்டாதனவாய் உதவி பெறவேண்டியவைகளாய் விட்டன. கொழும்பிலிருக்கும் றாயல் காலேஜ் (Royal College) ஒன்றே அரசாட்சி வித்தியாசாலைகளுள் இங்கிலீஷ் உயர்ந்த வகுப்புவரைக்குங்கற்பிப்பது. உதவிப்பணம் பெறுகின்ற மற்ற வித்தியாசாலைகளுள் இங்கிலீஷ் உயர்ந்த வகுப்பு வரைக்குங் கற்பிப்பன பல உள. அரசாட்சியார் படிப்பில் கெட்டிக்காரனாகிய ஒரு பிள்ளைக்கு இங்கிலாந்தில் போயிருந்து நாலு வருஷம் படிப்பதற்காக வருஷமொன்றுக்கு 150 பவுன் மாணவச்சம்பளம் (Scholarship) கொடுக்கின்றார்கள். இலங்கையிலே கேம்பிரிட்ஜ் யூனிவர்சிட்டியின் பிரவேசப்பரிக்ஷையும், சென்னை, கல்கத்தா, லண்டன் முதலிய சர்வகலாசாலைப் பரீக்ஷைகளும் நடைபெறுகின்றன. அங்கே விவசாய வித்தியா சாலைகளும் கைத்தொழில் வித்தியாசாலைகளும் உள்ளன.

வரவுசெலவு:—இலங்கையின் வருமானம், 1891-ம் வருஷத்தில், ரூபா 17,962, 710; செலவு ரூபா 16,165,079.

வருமானத்தில் முக்கியமானவை:- சுங்கம் ரூபா 4,137,542; நிலவரி ரூபா 1,178,738;—இதில் அரசுக்குரிய நிலங்களையும் குடியிறைத்தானியங்களையும் விற்பதனால் வரும்பணஞ் சேர்ந்துள்ளது; கள்ளுச் சாராயக்குத்தகை ரூபா 1,966,173; முத்திரை ரூபா 1,258,434; அரசாட்சிக்குரிய உப்பும் மரமும் விற்றபணம் ரூபா 1,326,818; ஆயத்துறைவரி ரூபா 732, 030; அரசாட்சியார் வைத்தோட்டும் புகைவண்டியால் 1851-ம்வருஷம் வரவுரூபா 4,430,034.

செலவில்முக்கியமானவை:—சிவில்ஜுடிசியல் உத்தியோகஸ்தர் செலவு ரூபா 2,964,308; சிவிலும் ஜுடிசியலும் அல்லாத மற்றைய உத்தியோகஸ்தர் செலவு ரூபா 1,932,894; சேனைச் செலவிற்காகக் கொடுத்தது ரூபா 1,195,182; இதில் வலன்டியர் (Volunteer) சேனையின் செலவும், இங்கிலாந்து அரசாட்சியாருக்குக் கொடுத்த ரூபா 1,083,925-ம் சேர்ந்துள்ளன; உத்தியோகஸ்தர்களுக்கு உபகாரச் சம்பளம் "பென்ஷன்" ரூபா 681,577; அரசாட்சியார் வாங்கிய கடனுக்குக் கொடுத்த வட்டி ரூபா 1,720,408; ரோட்டுமுதலிய பொதுவேலைகளுக்காக, 1891-ம் வருஷத்தில் செலவழிக்கப்பட்டது ரூபா 2,378,889. இதில் நீர்ப்பாய்ச்

சல் வேலைக்காகச் செலவழிக்கப்பட்டது ரூபா 3,36,623.

இலங்கை யரசாட்சிக்கு 1891-ம் ஆண்டு முடிவில் இருந்த கடன் 2,510,759 பவுனும் 335,840 ரூபாவும். இந்தக் கடன் 191 மைல் புகைவண்டி வீதி செய்வதற்கும், கொழும்புத் துறைமுகம் கட்டுவதற்கும், கொழும்பில் தண்ணீர்க்குழாய் வைப்பதற்கும் வாங்கப்பட்டது.

இலங்கையில் 1891-ம் வருஷத்தில் வந்த உள்ளூர் வருமானம் ரூபா 1,770,227.

விளைபொருள்:—இலங்கையின் நிலவளவு 16,233,000 ஏக்கர். இதில் 2,625,016 ஏக்கர் நிலம் பயிர்செய்யப்படுகின்றது. இதில் 1891ம் வருஷத்தில் 6,85,839 ஏக்கர் நிலத்தில் நெல்லும் பிறதானியங்களும் பயிரிடப்பட்டன; 55,924 ஏக்கர் நிலம் காப்பித்தோட்டம்; 2,01,179 ஏக்கர் நிலம் தேயிலைத்தோட்டம்; 40,447 ஏக்கர் நிலம் கறுவாத்தோட்டம்—கறுவாவை இந்தியாவில் இலவங்கப்பட்டை என்று வழங்குவார்கள்; 12,127 ஏக்கர் நிலம் சிங்கோனுத் தோட்டம்—சிங்கோனுவின்பட்டையிலிருந்து குயினயின் என்னும் மருந்து செய்யப்படும்; 759,605 ஏக்கர் நிலம் தென்னந்தோட்டம்; 9,082 ஏக்கர் நிலம் புகையிலைத் தோட்டம்; 19,471 ஏக்கர் நிலம் கொக்கோத்தோட்டம்.

இலங்கையில் நெல், வரகு, குரக்கன் (கேழ்வரகு), சோளம், தினை, சாமை, எள்ளு, பயறு, உழுந்துமுதலிய தானியங்கள் விளைகின்றன. குடிகளுக்குப்பலன்தரும் மரங்களில் மா, பலா, புளி, இருப்பை, வேம்புமுதலியவும் வாழை, பனை, தென்னை, தாளிப்பனை, கமுகுமுதலியவும் முக்கியமானவை. எலுமிச்சை, நாரத்தை, கிச்சிலி, மாதுளை, கறுவா, பருத்தி, கொடிமுந்திரி, முதலியனவும், மஞ்சள் இஞ்சி வெண்காயங்களும் அங்கங்கு உண்டாகின்றன. இவைகளெல்லாம் இலங்கைக்கு உரிய பயிர்கள். காப்பி, தேயிலை, சிங்கோனு, கொக்கோ, புகையிலை முதலிய புறத்தேசத்தன. காட்டிலே கருங்காலி, முதிரைபாலை, சமண்டலை முதலிய பெரிய மரங்கள் உள்ளன. இவைகள் வீடுகட்டவும் சாமான் செய்யவும் மிகவும் உபயோகமாகும். சென்னையில் வண்டிசெய்வதற்கு உபயோகமாகும் திருக்கணு மரம் என்பது சமண்டலை மரம். அது முதலில் திருக்கோணமலையிலிருந்து வந்தமையால் இழிவழக்கில் திருக்கணுமலை மரம் என்று சொல்லப்படும். இங்கிலீஷில் அதை (Trincomalee wood) என்று சொல்லுவார்கள்.

பனைமரம் இலங்கையின் வடபாகத்தில் மிகுதி. அதன் பழம், கிழங்கு, பனுட்டு முதலியவற்றால் வறியஜனங்கள் சீவிக்கின்றார்கள். அதன் ஓலை வீடுவேய்வதற்கும் வேலி அடைப்பதற்கும் சுளகு, பெட்டி, பாய் முதலியமுடைவதற்கும் புஸ்தகம் செய்வதற்கும் உபயோகமாகின்றது.

தென்னமரம் கடல்சார்ந்த நிலத்தில் செழித்து வளருகின்றது. இது யாழ்ப்பாணத்திலும் மட்டக்களப்பிலும் தென்மேற்குக்கரைகளில் கடற் சார்பு நிலங்களிலும் அதிகமாய் உண்டாகின்றது. தென்னங்கள்ளில் தென்மேற்கு மாகாணங்களிலே சாராயம் வடிக்கப்படுகின்றது. தேங்காய் உலர்த்திக்கொப்பறுவாக்கப்பட்டுச் செக்கிலிட்டு எண்ணெயாடப்படுவதோடு பிறதேசங்களுக்கும் அனுப்பப்படுகின்றது. தென்னந்தும்பினால் கயிறும் அந்தக்கயிற்றினால் பாயும் செய்யப்படுகின்றன.

தாளிப்பனை சிங்களவர் வசிக்கும் தென்மேற்கு மத்தியமாகாணங்களில் அதிகம். அது ஓலை அகன்று நீண்டு சிறந்திருக்கும். அவ்வோலைகளால் ஒருவித குடைகளும் சாந்தாற்றிகளும் புஸ்தகங்களும் செய்யப்படுகின்றன. தாளிப்பனை என்பது ஸ்ரீதாளம்.

கமுகு உள்நாடுகளில் செழிப்பாய் வளருகின்றது. அதன் பாக்கு மிகவும் உசிதமானது. அது அதிகமாய் இந்தியாவிற்கு ஏற்றுமதி செய்யப்படும்.

மிருகங்கள்:—இலங்கை யானையாற் சிறந்தது. தமிழரசர் காலத்தில் அவை அதிகம். அவைகளைப் பிடித்து இந்தியாவிலிருந்த அரசர் முதலியவர்களுக்கு விற்றதனால் அவர்களுக்குப் பெருவருமானம் வந்து கொண்டிருந்தது. தற்காலத்தில் அரபித்துலுக்கர் இலங்கையிற் போய்க் கட்டளைப்படி பணங்கட்டி அரசாட்சியார் உத்தரவுபெற்று யானைகளைப் பிடித்து வந்து இந்தியாவில் விற்பனை செய்கிறார்கள். காட்டு யானையால் நெற்பயிர் முதலியவைகளுக்குச்சேதம் விளைவதுண்டு. காடுகளில் சிறுத்தைப்புலியும் கரடியும், பன்றி, மான், மரை, குரங்கு முதலியனவும் உள்ளன. நாடுகளில் மாடும் எருமையும் அதிகம்; வடமாகாணத்தில் வெள்ளாடும் செம்மறியாடும் பெருந்தொகையாய் வளர்க்கப்படுகின்றன; நாயும் பூனையும் எங்குமுண்டு. 1891-ம் வருஷத்தில் இலங்கையில், 4,730 குதிரைகளும், 1,064,751 மாடுகளும்—இதில் எருமையுஞ் சேர்ந்துள்ளது, 87,930 செம்மறியாடும், 134,162 வெள்ளாடும் இருந்தன.

சிலகாடுகளில் மயில் அநேகமாயுண்டு. கோழி, புறா, மீகொட்டான் முதலிய எங்குங் காணப்படும். நாடுகளில் குயில், கிளி, நாகணவாய்முதலிய பறவைகள் மிகுதி; கழிக்கரைகளில் கொக்குகள் அதிகம். காகம் இல்லாத இடமில்லை; அதன்கொடுமை எங்கும் மிகுதி.

நாகம், மூக்கன், கருவழலை, புடையன் முதலிய நச்சுப்பாம்புகளும் சாரைமுதலிய நஞ்சில் பாம்புகளும் எங்குங் காணலாம். காடுகளில் மலைப்பாம்பு மிகுதி; அவை இருபதடி நீளம் வளரும். ஆறுகளிலும் குளங்களிலும் முதலைகளும் சேதும்பு நிலங்களில் அட்டைகளும் உள்ளன.

இலங்கையைச் சூழ்ந்த கடலில் பலவகை மீன்களும் மன்னார்க்குடாக் கடலிலும் திருக்கோணமலைக் குடாவிலும் முத்துச்சிப்பிகளும் உள்ளன. மன்னாரைச்சார்ந்தசலாபத்துறையில் அகப்படும் முத்து மிகவும் உயர்ந்தது. முத்துச்சலாபத்து வருமானம் 1890-ம் வருஷத்தில் ரூபா 310,000; 1891-ம் வருஷத்தில் ரூபா 960,000.

ஊவா மாகாணத்தில் நுவரெலி என்னுமிடத்திலுள்ள நீர்நிலைகளில் இங்கிலாந்து தேசத்து மீன்கள் கொண்டுவந்து விட்டுவளர்க்கப்படுகின்றன.

வாணிகம்:—இலங்கையில் 1891-ம் ஆண்டு இறக்குமதிசெய்த பொருள்களின் விலை ரூபா 66,635,392; ஏற்றுமதி செய்த பொருள்களின் விலை ரூபா 58,799,744.

இலங்கையிலிருந்து 1891-ம் ஆண்டு ஏற்றுமதிசெய்த பொருள்களுள் பிரதானமானவை:—காப்பி 5,731,167 ரூபா விலைபெற்றது; தேயிலை 30,473,267 ரூபா விலை பெற்றது; சிங்கோனு, 669,656 ரூபா விலை பெற்றது; ஈயம் 4,005,401 ரூபா விலை பெற்றது; தேங்காய் 8,177,123 ரூபா விலை பெற்றது; பாக்கு 907,193 ரூபா விலை பெற்றது. இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களுள் பிரதானமானவை:---பருத்தி நூற்புடவை 5,573,387 ரூபா விலைகொண்டது; உப்புமீன் 1,845,334 ரூபா விலைகொண்டது; அரிசி, நெல்லுமுதலியன 25,926,886 ரூபா விலைபெற்றன; நிலக்கரி 6,821,008 ரூபா விலைகொண்டது; குடிவகை 971,580 ரூபா விலைபெற்றன.

கோயினாலே சில வருஷங்களாகக் காப்பிக் கொட்டை விளைவுகுறைந்துவிட்டது. 1879-ம் ஆண்டு ஏற்றுமதி செய்யப்பட்ட காப்பி 824,509 அந்தர்; அது 1884-ம் ஆண்டு 299,395 அந்தராயும், 1887-ம் ஆண்டு 1,78,490 அந்தராயும், 1889-ம் ஆண்டு 89,693 அந்தராயும், 1891-ம் ஆண்டு 89,673 அந்தராயும் குறைந்து வந்துவிட்டது. இலங்கையிலிருந்து 1884-ம் வருஷம் ஏற்றுமதி செய்யப்பட்ட தேயிலை 2,392,975 ராத்தல்; அது 1885-ம் வருஷம் 4,372,721 ராத்தலாயும், 1886-ம் வருஷம் 7,849,888 ராத்தலாயும், 1887-ம் வருஷம் 3,834,057, ராத்தலாயும், 1888-ம் வருஷம்

23,820,471 ராத்தலாயும், 1889-ம் வருஷம் 34,346,432 ராத்தலாயும், 1890-ஆம் 45,799,518 ராத்தலாயும் ஏறிக்கொண்டு வந்து 1891-ம் வருஷத்தில் 67,718,371 ராத்தலாய் விட்டது. இலங்கையிலிருந்து ஏற்றுமதிசெய்யப்பட்ட கொக்கோ 1884-ம் வருஷத்தில் 9,241 அந்தாராயிருந்தது; அது 1888-ம் வருஷத்தில் 12,231 அந்தராயும், 1891-ம் வருஷத்தில் 20,615 அந்தராயும் வளர்ந்துகொண்டு வந்துவிட்டது.

இலங்கை வர்த்தகஞ் செய்வது முக்கியமாய் ஐக்கிய ராசாங்கத்தோடும் (United Kingdom) இந்தியாவோடும். இலங்கைக் கணக்கின்படி ஐக்கிய ராசாங்கத்திலிருந்து 1891-ம் வருஷத்தில் கொண்டுவந்து இலங்கையில் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களின் விலை 19,340,559 ரூபா. இலங்கையிலிருந்து ஐக்கிய ராசாங்கத்திற்கு ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்களின் விலை 4,148,824 ரூபா. இந்தியாவிலிருந்து வந்த இறக்குமதிப் பொருளின் விலை 39,476,245 ரூபா. இந்தியாவிற்கேற்றுமதி செய்யப்பட்ட பொருள்களின் விலை 7,042,083 ரூபா.

இலங்கையிலிருந்து ஐக்கிய ராசாங்கத்திற்கு ஏற்றுமதி செய்யப்படும் பொருள்கள் காப்பியும், தேயிலையும், சிங்கோனவும், கறுவாவும், தேங்காயெண்ணெயும், ஈயமும், கயிறும். ஐக்கிய ராசாங்கத்திலிருந்து வந்து இலங்கையில் இறக்குமதிசெய்யப்படும் பொருள்கள் பருத்தி நூற்புடவை, இரும்பு, யந்திரம், கரிமுதலியன.

நாணயம்:—இலங்கையில் வழங்கும் நாணயம் இந்தியாவின் ரூபாயும் சதமும். இந்தியாவில் வழங்கும் அணுவும் பையும் அங்கு இல்லை. சதம் நூறுகொண்டது ஒரு ரூபா. அங்கு வழங்கும் வெள்ளி நாணயம் நாலு:—ரூபாவும் ஐம்பது சதக்காசும், இருபத்தைந்து சதக்காசும் பத்துச்சதக்காசும்; செம்பு நாணயம் நாலு:—ஐந்துசதம், ஒருசதம், அரைச்சதம், காற்சதம்.

## "SOME MISTAKEN NATIONS OF CIVILISATION."

## நவ நாகரீக வேஷங்கள்.

---

I.

அநேகஜனங்கள் இக்காலம் நாகரீக காலமென்று சொல்லக்கேட்டிருக்கிறேன். நாகரீகமென்றால் என்னவென்று அவர்களிடம் கேட்டதில் இக்காலத்தில் நகை, புடவை, துணி மணி, பண்டம் பாத்திரம், கலியாண விமரிசை, வாத்தியகோஷம், நாசூக்கு, விருதோத்திப பணம், சீர் சிராட்டம் இவைகள் அதிகமாய் இருத்தல் தான் நாகரீக மென்றார்கள். வாசித்துப் பலவகை உத்தியோகம் நடத்திவரப்பட்டவர்களும் தற்காலம் நாகரீகமென்று சொல்கிறார்கள். கற்றவர்களும் கல்விபற்றவர்களும் எந்த அர்த்தத்தில் நாகரீகமென்ற வாக்கு உபயோகப்படுத்துகிறார்களென்று நிச்சயப்படுத்துவோம்.

கூர்மையாய் யோசிக்கு மிடத்து, டம்பம், நிதானம்கடந்த செலவு, அவிவேகம், ஸ்வயகாரியபுத்தி, பரகாரிய உபேக்ஷை, அற்பத்தனம், பேராசை, நாஸ்தீகருஷால், கோஷ்டி, ஆசாரவிருத்தம் (விரோதம்), பிறர்பால் மதிப்பின்மை, இவைகட்குத்தான் இப்போது ஜனங்கள் நாகரீகமென்று பெயர் கொடுத்திருக்கிறார்கள். இதைத்திருஷ்டாந்தப்படுத்திக் காண்பித்தால் வெளியாகு மாகையால் அவ்வாறு செய்கிறேன். ஆனால் விஸ்தாரமாக உதாரணங் கூறத்தொடங்கினால், அதுவே ஒரு புஸ்தகமாக முடியுமாகையால் ஒவ்வொன்றுக்கும் சில உதாரணங்கள் காட்டினாற் போதுமென்று நினைக்கிறேன்.

### தற்கால நாகரீகம்: டம்பம்.

எவ்வளவு கடனிருந்தாலும், கலியாணங்களில் கடன்வாங்கியாவது அபரிமிதமாய்ச் செலவுசெய்து ஒன்றிற்கதிகம் நாகசர ஜதைகள் வருத்தி பாண்டு முதலிய வாத்தியகோஷங்கள்

ஏற்படுத்தி, மாப்பிள்ளை, சம்பந்தி இவர்களை கலியாண கிரகத்திற்கழைப்பதில் பல்லக்குகள், வாணவித்தைகள், மத்தளப்புகள், நாட்டியங்கள், சாரட்டுகள் ஆவசியகமென்று அதி தோரணைகாட்டி, பந்தல்கள் வெகுசிங்காரமாக அலங்கரித்து, பக்ஷணங்கள், எண்ணெய் சர்க்கரை முதலிய பண்டங்கள் வண்டிகளில் ஊர்க்கெல்லாம் வழங்கி, சதிர்கூத்து, பட்டணப்பிரவேசம், பூரி சர்வாணி, இவைகள் நடத்தி, ஆடையாபரணச் செழிப்பாய், புஷ்பம் சந்தனம் வத்தி முதலிய சுகந்தாதிகள் பரிமளிக்க யாவர்கும் வழங்கி, பன்னீர்வருஷித்து, வந்த பேர்க்கெல்லாம் கோடியாடை கூசாமற்கொடுத்து அநேகபக்ஷணங்கள் பழவர்க்கங்கள் சகிதம் விருந்தளித்து, கலியாணசம்பந்தமாய் வந்த நெருங்கின பந்துக்களை ஆறுமாசம் ஒரு வருஷம் வைத்திருந்து போகும்போது வஸ்திரங்கள் வழிச்செலவிற்கு ரூபாய்கள் கொடுத்து மூலைக்குமூலை பாத்திரங்களாகவும் பண்டங்களாகவும் சிதறிக்கிடந்து எண்ணெயும் நெய்யும் தண்ணீர் படும்பாடு பரிமாறி, ஸ்திரீகட்கு வேலை கொடுக்காமல் பரிசாரகர்கள் ஏற்படுத்தி டம்பங் கொண்டாடுவது நாகரீகமென்றும் இல்லா விட்டால் நாகரீகமில்லை யென்றும் ஜனங்கள் நினைக்கிறார்கள். மேற்கண்டபடி செலவுசெய்வது அனுவசியகமென்று நினைத்து ஒருவன் செலவைச் சுருக்கினால் அவன் என்னத்தைக் கண்டானென்றும் என்ன சீர் சீராட்டஞ் செய்து அனுபோகப்பட்டிருக்கிறானென்றும், லுப்தனென்றும் ஜனங்கள் பழிக்கிறார்கள். பூர்வத்தில் வைதீகமாகவும் டம்பத்தில் யாதொரு செலவின்றியும் நடத்தி வந்த ஸம்ஸ்காரங்கள் சம்பந்தமாய் தற்காலத்தில் டம்பச் செலவு நாகரீகமென்று நினைத்து அனுவசியமாய் எவ்வளவோ செலவு செய்கிறார்கள். குழந்தைகட்கு அப்தபூர்த்தி, அன்னப் பிராசனம், அக்ஷராரம்பம் இவைகள் நடத்துவதில் 1000 ரூபாவரைச் செலவுசெய்து முடிவில் கெட்ட குடும்பங்கள் அநேகம். வீண்செலவு நாகரீக மென்ற பிரமையால் இனிமேல் குழந்தைகட்கு ஆமணக்கெண்ணெய்புகட்டி.பேதிக்குப் போனாலும் அதற்கும் நாகரீகமாகப் பெருஞ்செலவு செய்வார்களென்று சில சமயங்களில் நினைப்புண்டாகிறது. இந்துதேசச் சரித்திரத்தில் 'மகம்மது டோக்ளாக்' என்பவன் தன் பற்களில் ஒன்று விழுந்ததற்காக விழுந்தபல்லை பல்லக்கிலேற்றி வாத்தியகோஷங்களோடும் பட்டாள விருதுகளோடும் பட்டணப்பிரவேசம் செய்வித்து முடிவில் ஒரு கோரிகட்டி அதை அடக்கஞ்செய்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்பித்தன் செய்ததுபோல நம்முடைய ஜனங்களும் நாகரீகம் பெருகப்பெருக விசேஷச் செலவு செய்து பல்லை யடக்கஞ் செய்வார்களோ என்னவோ தெரியவில்லை. பிரசவித்த பெண் புக்ககம் போகும்போது அவ்வீட்டில் நேரே இறங்காமல் அந்நிய கிரகங்களில் இருந்து கொண்டு பக்ஷணங்கள் செய்து கொட்டு மேளத்துடன் பெண்ணைக்கொண்டு விடுவது நாகரீகமென்றெண்ணி அதற்கு வேண்டிய அனுவசியச் செலவு செய்கிறார்கள். இவ்வாறு நாகரீகங் கொண்டாடுவதற்கும் டோக்ளாக்கென்பவன் நாகரீகமாகப் பல்லை யடக்கஞ் செய்ததற்கும் வித்தியாசம் ஒன்றுங் காணேன்.

தற்கால நாகரீகம்: நிதானங்கடந்த செலவு.

ஒருவன் நெருங்கின பந்துக்களில் யாராவது வந்து நாலுமாசம் ஆறுமாசம் இருந்து திரும்பிப்போகும்போது அவருக்கு அவன் கடன் பட்டாவது விலையுயர்ந்த வஸ்திரங்கள் ஆபரணங்கள் வாங்கிக்கொடுத்தால் நாகரீகமென்றும் இல்லாவிட்டால் நாகரீகமில்லையென்றும் மற்றெந்தவிதத்திலும் அன்பாதரவு காண்பித்தாலும் பெருமையாக ஆடையாபரணங்கள் கொடுக்காவிட்டால் உபயோகமில்லையென்றும் நினைக்கிறார்கள். முன் நடந்துவந்த நிதானப்படியாவது அதற்குக் கொஞ்சம் மிகுதியாக வாவது செய்தாலும் அதில் திருப்திவராமல் மனஸ்தாபம் ஜனித்து விரோதபாவம் கூட வருகிறது. பணமூலமாகவும் வஸ்திராபரண

மூலமாகவும் அபிமானங் காண்பிக்கவேண்டிய சந்தர்ப்பங்களில் புராதீன மட்டிலாவது தன் சக்திக்குள்ளடங்கின மட்டிலாவது அபிமானங் காண்பித்தாலும் அது தற்காலத்தில் திருப்தியாகிறதில்லை. ஸ்திதீனங்கடந்து பெண்கள் கேட்டுப் பதார்த்தங்கள், ஆபரணங்கள், வஸ்திரங்கள் வாங்கிக்கொடுக்காவிட்டால் அதுவும் அநாகரீகமென்று நினைக்கிறார்கள். மட்டிற்கு மிஞ்சி சமையல்செய்வதிற்கூடக் கொட்டிச் சிந்தினாற்றான் நாகரீகமென்ற அபிப்பிராயம் வந்திருக்கிறது. குழந்தைகளின் தேகஸ்திதியைப்பார்த்து மந்தமானதும் ஜீரணத்திற்கு எளிதில் வரக்கூடாததும் ரோகங்களை விளைவிக்கக்கூடியதுமான பதார்த்தத்தை வாங்கிக் கொடுக்காதிருந்தால் அநாகரீக மென்றும் குழந்தைகள் சாப்பிட்டு வியாதிவந்தாலும் சாப்பிட முடியாமல் இருந்தாலும் வாங்கிப் போடவேண்டியது போடவேண்டியதுதானே, இந்த நாளையில் தேகசுகத்தை யார் பார்க்கிறார்களென்றும் சொல்கிறார்கள். பரிமாறுவதிற் கூட மட்டுக்கு மிஞ்சிப் போடுவது நாகரீகமென்று நினைக்கிறார்கள். விருந்தாதிகள் முடிப்பதிலும் வைதீக மெட்டாக ஆவசியகமான மட்டில் செலவுசெய்து நடத்தினால் அதுவும் அநாகரீகமாக பவிக்கிறது. தாங்கும்படியான ஆபரணங்கள் செய்தால் சிறிதென்றும் நாகரீகமில்லை யென்றும் நகைக்கிறார்கள். உள்ளே கட்டையடைத்து வெளியே தங்கத் தகடுகள் பொதிந்து நல்ல கட்டிபோற் செய்தாலும் முழுமையும் தங்கமில்லையென்று கருக்தின்மேல் 'அதென்னமாயிருக்கும் எடுத்தகை இத்து(இற்று)ப்போக வேண்டாமோ. ஆய்! நன்றாய் இல்லை'யென்றும் நகைக்கிறார்கள். திருமங்கலியம் இப்போது நாலுவிரல் ஐந்து விரல் அகலம் இருந்தால் நாகரீகமென்று மட்டுக்குமிஞ்சி முரம்போல் செய்து போட்டுக் கொள்கிறார்கள். தங்கக்கொடி செய்தாலும் பெருங் கொடியாய் இல்லாவிட்டால் அதுவும் அநாகரீகமே.

முன் சொன்ன திருஷ்டாந்தங்களால் ஏழை பந்துக்கட்கு அன்னவஸ்திரங்களாலும் மற்ற திரவியங்களாலும் சக்திக்குட்பட்டு உதவி செய்யவேண்டாமென்று சொல்ல வரவில்லை. அவ்வாறுசெய்யவேண்டியது ஆவசியகந்தான்.

தற்காலநாகரீகம்: அவிவேகம்.

ஆகாரத்திற்கு ஆதாரமாயிருக்கப்பட்ட நிலங்களை விற்றுவது ஆபரணங்கள் செய்தணிந்து கொள்கிறார்கள். விலையுயர்ந்த வஸ்திரங்கள் வாங்குகிறார்கள். டம்பச்செலவு கொண்டாடுகிறார்கள். வட்டிக்குக் கடன்வாங்காமல் உடனே நிலங்களை விற்று மேற்கண்டபடி வீண் செலவு செய்தாலும் கொஞ்சம் லாபம் உண்டாகும். பாரம்பரியமாய் வந்தநிலங்களை முதலாவது விற்பதற்கு மனம்வராமல் உயர்ந்தவட்டிக்குக் கடன்வாங்கி பிற்பாடு வட்டி மேன்மேலும் விஷம்போற் கூடிவர நிர்வாகமில்லாமல் அதிரடியாக விற்கிறார்கள். ஆடையாபரணப் பெருமையாலும் கலியாண விமரிசையாலும் நாகரீகம் கொண்டாடும் அறிவிலிகள் இப்போது தங்கட்குள்ள பூஸ்திதிகளையெல்லாம் இழந்து தெருவில் நிற்கின்றார்கள். இக்காலத்திலோ மேற்கண்ட காரணங்களால் பிராம்மணர் கைவசம் இருந்த அநேக தர்மஸாஸனக் கிராமங்கள் வீண்செலவின்மூலம் நாகரீகம் கொண்டாடாத தாழ்ந்த ஜாதிக்காரருடைய கைவசம் வந்துவிட்டன. பெண்டாட்டி வழி நெருங்கின பந்துக்கட்கு உபசாரஞ்செய்வதும் மரியாதை செய்வதும்உபகாரஞ்செய்வதும் நாகரீகமென்றும், தற்கால நியாயமென்றும் நினைக்கும் சில மூடபுத்திகள் பெற்றோர் உடன்பிறந்தோர் மற்றுள்ள சுற்றத்தார் இவர்களைக் காணவொட்டாமல் அடிக்கிறார்கள். இவர்கட்கு ஒருவேளையன்னங்கூடப்போட மனமற்றுப் போகிறார்கள். தன் பொருளைத் தன் பிதாவுக்குக்கொடுத்தால் நூறுபங்கு பலனும் மாதாவுக்கானால் ஆயிரம்பங்கு பலனும் மகளுக்கானால் முடிவில்லாத பலனும் சகோதரிக்குக் கொடுத்தால் விசேஷ பலனுமுண்டென்று வியாசாரலும்

இதரர்களான சகோதரி, அம்மான், அத்தை முதலான தன் பந்துக்களுக்குக் கொடுத்தால் கோடிபங்கு அதிகமான பலன் கிடைக்குமென்று பவிஷியோத்தர புராணத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. தன்குடும்பச்செலவுக்கு வேண்டிய பொருள்தவிர மற்ற திரவியங்களை மாத்திரம் கொடுக்கலாமென்று யாக்கியவல்கியர் கூறுகின்றார்.

பெண்கட்கு சீராகக்கொடுக்கப்படும் பாத்திரங்கள் உபயோகித்தால் புதுக்கருக்கு (கருக்கென்றால் நேர்த்தி) அழிந்து போகுமென்று நினைத்து உபயோகிக்காமல் ஷை பாத்திரங்களைச் சீராக அடைந்த பெண்கட்குப் பெண் குழந்தைபிறந்து அக்குழந்தை பிராப்தியாகி அவட்குச் சீர்கொடுக்கும்வரை கொடுத்தமேனியாக வைத்திருப்பது நாகரீகமென்றும், எடுத்தாண்டு காவிப்பூச்சுமாறினால் அது அநாகரீகமென்றும் ஆவசியகம் நேரிட்டால் சீர்வந்திருக்கும் பாத்திரம்போல் விலைக்கு வாங்கிக்கொள்ள வேண்டு மென்றும் சொல்கிறார்கள். இடத்திற்குக் கேடாய் வந்தபாத்திரங்களை ஆளாமல் வைத்திருப்பானேன்? புதுப்பாத்திரம் வாங்குவானேன்? என்று சீர்வந்த வீட்டில் பெரியோர் சொல்லி யெடுத்துபயோகித்தால் சண்டை விளைகிறது. ஸ்திரீகளின் வார்த்தையைக்கொண்டு புருஷர்கள் கூட அச்சண்டையிலும் அதை சம்பந்தித்த விவகாரத்திலும் தலைகொடுக்கிறார்கள். சீப்பு, சிடுக்குவாரி, சுண்ணும்புக்கரண்டம், கொம்பு, சாந்துச் சிரட்டை, மைச்சிமிழ் இவைகள் வெள்ளியிலும் சுவர்ணத்திலும் செய்யவேண்டியது நாகரீகமென்றும் அவ்வாறு செய்யாவிட்டால் அநாகரீகமென்றும் நினைக்கிறார்கள். கலியாணசந்தர்ப்பங்களில் நிச்சய தாம்பூலத்திற்கும் விளையாடல்கட்கும் இயற்கையிலுள்ள தேங்காய் வாழைப்பழம் அநாகரீக மென்றெண்ணி வெள்ளியினாலும் தங்கத்தினாலும் அவைகளைச் செய்துவைத்து நாகரீகங்கொண்டாடுகிறார்கள். மகாவிகாரமான மரப் பாவைகட்கு ஸ்திரீகட்குக் குத்துவதுபோல் காது மூக்குக்குத்தி ஆபரணங்கள் இடுவது நாகரீகமென்றும் இல்லாவிட்டால் நாகரீகம் இல்லையென்றும் மரப்பாவைகட்கு வேண்டிய ஆப்ரணங்களில் பெரும்பணம் இழக்கிறார்கள். கொலுசாமான்களென்று யாதொரு உபயோகமில்லாத பதார்த்தங்களில் வீண்பணம் போடுகிறார்கள். முரம், படி, மரக்கால், அஞ்சறைப் பெட்டி இவைகள் கெடுதலானாலும் பித்தளையில் இருப்பது நாகரீகமென்று அனுவசியமாய்ப்பணம் செலவு செய்கிறார்கள். முதலாவது கெர்ப்பமா யிருக்கும் பெண்கட்கு *மொட்டுச்சூட்டும் சுபசோபன முகூர்த்தத்தில் சாதாரணமாயுள்ள புஷ்ப மொட்டுகள் சூட்டுவது மேன்மையில்லை யென்றும் பொன் வெள்ளியாற் செய்த மொட்டுச்சூட்டுவது நாகரீகமென்றும் நினைத்து அவ்வாறு பெருமுதல் அழிக்கிறார்கள். காலஞ்செல்லச்செல்ல, நாகரீகம் கூடக்கூடக், கலியாண சந்தர்ப்பங்களில் பெண்பிள்ளைகட்கு ஆகாரங்கூட பொன்வெள்ளியாற் செய்தளிப்பார்களென்று நினைக்கிறேன்.

### தற்கால நாகரீகம்: சுவயகாரியபுத்தி.

நாகரீகமென்றபேர்வைத்துக்கொண்டுநாளுக்குநாள் சுவயகாரியபுத்தி வர்த்தனையாகிறது. இவ்வகைச் சித்தவிருத்தியால் மனைவிகளின் சொற்கேட்டு மாதாபிதாக்கள், சகோதரர்கள், பெற்றோர்வழியுற்றோர்கள் இவர்களை யண்டவொட்டாமல் அடித்து அவர்கட்கு எவ்வளவு கஷ்டநிஷ்டூரம்நேரிட்டாலும் அதிற்கொஞ்சம் கூட பச்சாதாபமும் அனுதாபமும் இல்லாமல் கேவலம் சுவர்போல் இருந்துவிடுகிறார்கள். ஒருத்திகுழந்தைகள் எவ்வளவு கதறியழுதாலும் தயங்கினாலும் அவளுடைய யாதாக்கள் (அதாவது ஓர்ப்படிகள், மைத்துனருடைய ஸ்திரீகள்) இந்த நாகரீகநாளில் "ஒருத்தி குழந்தையை ஒருத்தி எவள் எடுக்கிறாள்? யாருக்கார்"? என்று உபேக்ஷையாயிருந்துவிடுகிறார்கள். தத்

* இதற்கு 'பூச்சூட்டல்' என்றும் சொல்கிறதுண்டு.

தம்காரியமே பெரிதென்றும் நாகரீகமென்றும் நினைத்து, நிராதரவாய் விட்டுப் போயிருக்கும் தாயில்லாக் குழந்தைகளைக்கூட கவனித்துப் பார்க்காமல் ஈயும் எறும்பும் பிடுங்கும்படி கைவிடுகிறார்கள். சடும் புத்திரசோகப்பட்ட மாமன் ஆனாலும் மாமியானாலும் அவர்களுக்கிதமாக யாதொன்றும் செய்யாமல் ஆகாரங்கூட பரிமாற மனமற்று தத்தம் ஆகாரமுடிந்தவுடன் விசனமடைந்தவர்கள் எப்படியாவது எடுத்துவைத்து சாப்பிடட்டுமென்று அலக்ஷியமாகவும் கன்மனமாகவும் இருந்துவிடுகிறார்கள். பரஹிம்சையில் சற்றேனும் இரக்கங்காட்டாமல் தாமேன் என்று இருந்துவிடுகிறார்கள். வீடுகளில் பக்ஷணங்கள் பண்டங்கள் உண்டாக்கினாலும் பழவர்க்கங்கள் வருத்தினாலும் தாங்களும் தங்கள் ஸ்திரீ வழி மாமி மைத்துனன் மைத்துனி முதலியபேரும் அநுபவிக்கும் பொருட்டுப் பூட்டிவைத்து மறைவாகப் பெற்றோர் உற்றோர் சகோதரர்கள் காணாமல் அநுபவிக்கிறார்கள்.

தற்கால நாகரீகம்: பராகாரிய உபேக்ஷை.

ஆடையாபரண நாகரீகங்கொண்டாடும் தற்கால ஜனங்கள் அடுத்த வீட்டில் பிணங்கிடந்தாலும், பிணத்தை யெடுப்பதற்கு ஆளில்லாமல் தவித்தாலும், ஓர்வித சகாயமும் செய்யாமல் வேடிக்கை பார்த்துக்கொண்டு, பிரேதத்தை வண்டியில் ஏற்றி ஆடுமாடுகளைப் புதைக்கும் வண்ணம் புதைக்கும்படிபார்த்துக்கொண்டிருக்கிறார்கள். அடுத்தவீட்டிற் கள்ளன்வந்து கொள்ளையிட்டாலும் ஏனென்று கேட்காமல் நமக்கென்ன வென்றிருந்து விடுகிறார்கள்.

தற்கால நாகரீகம்: அற்பத்தனம்.

தாயில்லாக்குழந்தைகட்குக் கொஞ்சம் பால் கொடுத்து அன்னமிட்டால் பொருள் நஷ்டமென்று அதனால் ஆபரணஞ் செய்தணிவதற்கு சக்தி குறையுமென்றும் நினைத்து அக்குழந்தை விஷயத்தில் மகா வஞ்சனையாகவும் கடூரமாகவும் இருத்தல்: ஆபரணமணிந்து அழகு கொண்டாடுவதில் அதற்குத் தகுந்தபடி நிறம் செகப்பாய் இருக்கவேண்டுமென்று கருதி, வீட்டுபயோகத்திற்கு வேண்டி வாங்கப்பட்ட நெய் எண்ணெய் இவைகளைவைத்துப் பூட்டிக் கொண்டு எல்லாருடன் சாப்பிட்டால் தமக்கு நெய்குறைந்துவிடுமென்று தனியாயிருந்து சாப்பிடல்; பெற்றோர் உற்றோர் வந்திருக்குங் காலங்களில் பக்ஷணம் பண்டம் செய்தால் அவர்கட்குக் கொடுக்க வேண்டி வருமென்று நினைத்து அக்காலங்களிற் செய்யாமல் அவர்கள் சென்றபின் செய்தல்; ஏழை பந்துக்கள் வந்தால் அவர்கள் காண நல்ல பண்டங்கள் செய்தால் கண்படுமென்றும் கொடுக்கவேண்டுமென்றும் நினைத்து வெளியே போகச்சொல்லிக் கதவடைத்தல்; ஒருவேளை பண்டங்கள் அருந்திக்கொண்டிருக்கும் சமயத்தில் வந்துவிட்டால் அந்நியகிரகங்களிற் கிடைத்ததாகப் பொய் கூறல். இவைகளையெல்லாம் மூடஜனங்கள் நாகரீகமாக நினைக்கிறார்கள்.

தற்கால நாகரீகம்: அன்பின்மை.

ஆபரணம்செய்துபோட்டால்மாத்திரம் அன்புவைத்தல், இல்லாவிட்டால் உபேக்ஷை செய்தல், ஏழையை முகம்முறித்துப்பேசல், ஏழைகள் அன்னிய ஊரிலிருந்து வந்தாலும் வந்தாயா வென்று கேட்காதிருத்தல், முகம்கொடுத்துப் பேசாதிருத்தல், வரும்படி தாழ்ந்த எளியோரிடம் போக்குவரவில்லாமலிருத்தல், தாழ்ந்த நிலையிலுள்ள பால்ய சிநேகிதர்களை மறத்தல், இவைகளும் நாகரீகமாக நினைக்கப்படுகின்றன.

தற்காலநாகரீகம்: பேராசை.

இதற்கு உதாரணம் ஆவசியகமில்லை.

தற்கால நாகரீகம்: நாஸ்திகத்துஷால்.

நமதுதேசத்தில் பைரங்கமான நாஸ்தீகர்கள் கிடையார். ஆனால் நாஸ்தீகன் எவ்வாறு நடப்பானோ அவ்வாறு நடக்கும் ஜனங்கள் முக்கியமாய் அங்கிலேயப்படிப்புள்ளவர்களிடம் காணலாம். இவர்கள் 'மனசே ராஜா' என்ற அவித்தையின் சித்தாந்தம் அநுசரித்து

தெய்வபக்தி மூடத்தனமென மதித்து ஸ்நானம் வந்தனம் ஜெபதபம் இல்லாமல் விஷயாதுரராய் பிரபஞ்சசுகமே சுகமென்று கட்சரக்கு முதலிய லாஹிரி பதார்த்தங்கள் நாகரீக சின்னமாகக் கைக்கொண்டு பூர்வாசாரங்களை நழுவவிட்டு நூதனமுறை யெல்லாம் நுட்ப முறையாய் நம்பி ஈஸ்வரன் திருநாமம் எடுத்தால் சாதுத்வமென்றும் அநாகரீகமென்றும் நினைத்து விபூதிமுதலிய மதசின்னங்கள் அணிவது அகௌரவம் என்று தள்ளி, சாந்துப்பொட் டணிந்து தர்மநிந்தையே பழைய சிநேகிதனுகப்பாவித்து பெரியோர் கைவிட்ட முறையெல்லாம் பத்தியமாக அநுசரித்து தெய்வபக்தியுள்ளவர்களைப் பரிஹசித்து அவர் கட்கிடுக்கண் வருத்தி நாகரீகம் கொண்டாடுகிறுர்கள்.

தற்காலநாகரீகம்: கோஷ்டி.

ஜனங்கள் எப்படி நடக்கிறுர்களோ அதற்கு விபரீதமாய் நடத்தல் நாகரீகமென்றுநினைத்து உட்காரும் பாயிலும் படுக்கையிலும் எச்சிற் காளாஞ்சி (கோளாம்பை) வைத்துத் துப்புதல், பற் குத்தினுல் கையலம்பா திருத்தல், நின்று கொண்டு ஜலவிசர்ஜனம் செய்தல், பற் கொண்டு நகம் கடித்தெறிதல், எப்போதும் எச்சில் பண்ணுதல்,ஸ்நானம்பண்ணுமல் ஆகாரம் அருந்தல், உண்ணும்போது 'ஜாக்கட்டு' முதலிய அங்கியணிதல், சுருட்டுக்குடித்தல், சட்டைக்காரரைப்போல் டொப்பிவைத்தல், உண்டென்பதற்கு இல்லையென்றும் இல்லையென்பதற்கு உண்டென்றும் காரிய நியாயம் பாராமல் விதண்டாவாதஞ்செய்தல், தண்ணீர் சூப்பிக்குடித்தல் இவை முதலியவை நடத்துகிறுர்கள். சில நாகரீகம் கொண்டாடும் அறிவிலிகள் ஒவ்வொருநாளும் வஸ்திரம் மாறுமல் உடுத்தினவஸ்திரத்தையே அனேகநாள் உடுத்தி படுக்கைவஸ்திரமென்றும் வெளிவஸ்திரமென்றும் வித்தியாசம் கவனியாமல் தேவாலயங்கள், யாகசாலைகள் மற்றும் பரிசுத்தஸ்தலங்கள் இவைகளில் வந்தாலும் எல்லோரையும் அசுத்தப்படுத்தி ஓர்வித சிரத்தை பக்தியில்லாமல் கோஷ்டி காண்பிக்கிறுர்கள்.

தற்காலநாகரீகம்:
இயற்கைவிடுத்த செயற்கைதணம்.

வாக்குமனம் ஒன்றுபடாதசெய்கை, மனம் ஒன்றுபடாதவார்த்தை, பாவமாறுபாடு இவைகளும் நாகரீகமாய் நினைக்கிறுர்கள்.

தற்காலநாகரீகம்: துர்வழக்கு.

கோர்ட்டுகளிலும் வக்கீல்களிடத்திலும் போக்குவரவு வைத்துக்கொண்டு தைரியமாய்ப் பேசி உபசரிக்கப்படுவது நாகரீகமென்றுகருதி, வழக்கில்லாவிட்டாலும் அந்த அபிப்பிராயம் நிறைவேறும்பொருட்டு துஷ்த்தர்க்கம் உண்டாக்குதல், துரும்பைத் தூணாக்கல், விடாகண்டன் என்று பெயர் வாங்கும் பொருட்டு என்னசெலவு செய்தாவது பெரிய கோர்ட்டுவரை வழக்காடல், கக்ஷிகளை மோசப்படுத்தத் தந்திரஞ்செய்தல், வழக்கில் நிபுணன் என்று பேர்வாங்கும் பொருட்டு தேரலங்கரித்தாற்போல பொய் ஜோடனைசெய்து நிர்மிதமாய் விவகாரப்படல், இப்பேர்ப்பட்ட பிரவிருத்திகளைச் செய்கிறுர்கள்.

தற்காலநாகரீகம்: அகங்காரம்.

பெரியோர்முதியோரென்ற மதிப்பின்றி தாம் எல்லோரிலும் மேன்மையென்றுநிகாணித்து லக்ஷியமில்லாமல் இருத்தல், தான் என்றபிடிவாதம் எல்லாவற்றிலும் உசிதாஉசிதம் பாராமல் நிலைநாட்டி, தான் யாரையும் பணியாமல் தன்னை யெல்லோரும் பணியவேண்டுமென்று நாட்டம்வைத்தல், தன்னைப் பணியாதவரைக் கெடுக்கமுயலுதல், முற்காலத்து இருஷிகள் முனீஸ்வரர்கள் இவர்களைத் துடுக்காக எடுத்தெறிந்துபேசல், பிறரைப் புண்படுத்திப் பேசுதல் இவைகளெல்லாம் நாகரீகமாக சில அறிவிலிகள் எண்ணுகிறுர்கள்.

தற்காலநாகரீகம்: அதர்மம்.

சமயம்போல் பொய்பேசி, அசத்தியஞ்செய்து மீனுக்குத்தலையும் பாம்புக்கு வாலுங்காட்டி, பிள்ளையையுங் கிள்ளி தொட்டிலையும் ஆட்டி விட்டுப் பாலுக்குக்காவலும் பூனைக்குத் தோழனுமாக இருந்து அகட விகட சாமர்த்தியங் காட்டி, தோஷித்தனம், புறட்டுத்தனம் தாராளமாய் உபயோகித்து பொருள சம்பாதித்தல் நாகரீகமென நினைக்கிறுர்கள்.

மேற்கண்ட ஒருவகை அபிப்பிராயமும் நாகரீகத்தைச் சேர்ந்ததன்று; வாஸ்தவமான நாகரீகம் இன்னதென்று அடுத்த பத்திரிகையில் விவரிப்போம்,

## SHORT STORY.

### வைத்தியநாதன்.

(முன் தொடர்ச்சி.)

"இனிமேல் தான் ஊரில் பள்ளிக்கூடம் ஏற்படுத்தப் போகிறார்கள். அதனால் இவர்களுக்கெல்லாம் நான் தான் பாடஞ் சொல்லிக் கொடுக்கிறேன்" என்று மலர்ந்த முகத்துடன் சஞ்ஜீவி கூறினான்.

வைத்தி—"சிறு பையன்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதென்றால் கஷ்டமாக வில்லையா?"

சஞ்ஜீவி—"முதலில் கஷ்டமாகத் தானிருந்தது. இப்பொழுது கஷ்டமாகவே தோன்றவில்லை. அவர்கள் கல்வியில் விருத்தியாவதைப் பார்க்க சந்தோஷமாயிருக்கிறது."

வைத்தி—"இந்த விதமாக எத்தனை நாளாக ராமமூர்த்தி முதலியவர்களுக்குச் சொல்லித் தருகிறாய்?"

சஞ்ஜீவி—"சுமார் பத்துமாத மாகத்தான் சொல்லித் தருகிறேன்."

வைத்தி—"அதற்கு முன்னமே யார் பாடஞ் சொல்லிக் கொடுத்து வந்தது? சிற்றப்பாவா?"

சஞ்ஜீவி—"இல்லை இல்லை, வைத்தியநாதா! நான் சொல்லிக்கொடுப்பதற்கு முன் சுப்பிரமணிய சாஸ்திரிகள் என்பவர் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். அவர் பட்டணம் போய்விட்டபிறகு நான் தான் ராமமூர்த்தி முதலியவர்களுக்கு இங்கிலீஷ், தமிழ் முதலியவை கற்றுத் தருகிறேன்.

வைத்தி—"சுப்ரமணிய சாஸ்திரிகள் போனபிற்பாடு சிற்றப்பா வேறே உபாத்தியாயரை பாடஞ் சொல்லித்தர ஏற்பாடு செய்யவில்லையா?"

சஞ்ஜீவி—"அப்பா அப்படித் தான் சொன்னார். இந்த ஊரில் நம்மை விட அனேகம் பேர் ஏழைகள் இருக்கிறார்கள். அவர்களுடைய பிள்ளைகள்படிப்பதற்கு ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்தவேண்டுமென்று அப்பாவுக்கு ஆசை. இதைப்பற்றிகவர்ன்மெண்டாருக்குத் தெரிவித்ததில் மூன்று உபாத்தியாயருக்குச் சம்பளம் இவ்வூராரே கொடுப்பதானால் இங்கு பள்ளிக்கூடம் ஏற்படுத்துவதாகச் சொன்னார்கள்.

கோதண்டராம முதலியார், ஒரு உபாத்தியாயருக்கும், தாண்டவராய பிள்ளை ஒரு உபாத்தியாயருக்கும் சம்பளம் கொடுப்பதாக ஒத்துக்கொண்டார்கள். மூன்றாவது உபாத்தியாயருக்குச் சம்பளம் கொடுக்க அப்பாவுக்கு இஷ்டம். ஆனால் வீட்டில் பாடஞ் சொல்லிக் கொடுக்கும் உபாத்தியாயருக்கும் பள்ளிக்கூட உபாத்தியாயருக்கும் சமபளம் கொடுப்பது ரொம்பவும் கஷ்டம் என்று அப்பா ஒரு நாள் சொன்னார். "பையன்களுக்கு நான் சொல்லித் தருகிறேன், உபாத்தியாயர் அவசியமில்லை" என்று நான் சொன்னேன். முதலில் அவர் சம்மதிக்கவில்லை. ஆனால் நான் அடிக்கடி தொந்தரவு செய்ததின்பேரில் "முதலில் கொஞ்ச நாள் சொல்லிப்பார், முடியுமானால் நான உபாத்தியாயர் வைக்கவில்லை" என்று அப்பா சொன்னார். பிறகு நான் சொல்லிக் கொடுப்பதைக் கேட்டு திருப்தியடைந்து உபாத்தியாயர் ஏற்படுத்த வில்லை. உபாத்தியாயருக்குக் கொடுக்கவேண்டிய பணத்தை இப்பொழுது பள்ளிக்கூடம் கட்டுவதற்குக் கொடுக்கிறார்" என்றான் சஞ்ஜீவி.

இவ்விதம் வைத்தியநாதன் எல்லா சமாசாரங்களையும் சஞ்ஜீவியினிடமிருந்து வினைவிடையாக அறிந்து கொண்டான். மேற்கூறிய விஷயங்களைக் கேட்டபிறகு தான் சஞ்ஜீவியினுடைய உயர்ந்த அறிவும், அன்பும் வெளிப்பட்டன. பிறருடைய நன்மைக்காக தன் சௌகரியத்தைப் பார்க்காமல் அவன் கஷ்டப்படுவதைக் கண்டான்.

சஞ்ஜீவியினிடத்தில் ராமமூர்த்தி முதலியவர்களுக்கு இருக்கும் அன்பையும், விச்வாசத்தையும், சஞ்ஜீவி தன் தம்பிகளை கண்ணும் கருத்துமாய் பாதுகாத்து வருவதையும் வைத்தியநாதன் நன்றாய் அறிந்தான்.

உரத்த குரலுடன் சண்டை செய்வது என்பது அவ்வீட்டிலியே கிடையாது. யாவரும் ஒருவர்க்கொருவர் அன்புடன் பேசினார்கள் கடுகடுத்த முகமாவது, கோபமான சொல்லாவது கிடையாது. பார்ப்பவர்கள் "பிள்ளைகளிருந்தால் இவர்களைப் போலல்லவா இருக்க வேண்டும்" என்று கூறுவார்கள்.

இது நிற்க, சஞ்ஜீவி வைத்திய நாதனைப் பார்த்து, "நாள் முழுவதும் ஓயாது ஏதாவது நற்காரியம் செய்தபோதிலும், நான் செய்வது அதிகமில்லை" என்றான்.

"இந்த மாதிரி நீ உழைக்கும்போதே, ஒன்றும் செய்யவில்லை யென்று சொன்னால், நான் என்ன செய்கிறேன்" என்று சிற்று விசனத்துடன் வைத்தியநாதன் கூறினான். இவன் இப்படி சொன்னதின் அர்த்தம் சஞ்ஜீவிக்குத் தெரியவில்லை அதனால் அவன் "உனக்கு இங்கு ஒரு வேலையுமில்லை, அதனால் தான் ஒன்றும் செய்யவில்லை என்கிறாய். ஊரில் உனக்கு ஓயாமல் ஏதாவது காரிய மிருக்கும்" என்றான் வைத்தியநாதனைப்பார்த்து.

வைத்தியநாதன் பதில் ஒன்றும் சொல்ல வில்லை. "ஐயோ! நாம் இருந்து என்ன பிரயோசனம். ஏதாவது நல்ல காரியம் என்றைக் காவது செய்தோமா? அல்லது செய்கிறோமா?" என்று தன்னையே கடிந்து கொண்டான்.

இவ்விதமாகச் சில நாட்கள் சென்றன. வைத்தியநாதன் தன் சிறிய தகப்பனாருடைய வீட்டிலேயே இருந்தான். அவனறியாமலே அவன் மனது சஞ்ஜீவியினுடைய பொறுமையையும், சாந்தத்தையும், மிருதுவான சம்பாஷணையையும் உட்கொண்டது.

"நான் இத்தனை நாளாய் நம்மைச் சேர்ந்தவர்களுக்கு ஒரு பளுவாக இருந்தேனே தவிர கொஞ்சமாவது உதவியாயிருந்தேனா? அப்படியிருந்தது தகுதியன்று அல்லவா?" என்று அவன் மனச்சாட்சி அவனையே கடிந்து கொண்டது. இனிமேலாவது முன்போலிராமல் நம்மைச் சேர்ந்தவர்களுக்கு ஒத்தாசையாக இருக்கவேண்டும் என்று தீர்மானித்தான்.

வைத்தியநாதனை ஊருக்கு அனுப்பும்படி அருணாசல அய்யர் கடிதங்கள் எழுதினார். "குழந்தைகளெல்லாம் அண்ணாவைப் பார்க்க வேண்டும் என்கிறார்கள்" என்று எழுதினார். தன் தகப்பனார் சகோதரர் முதலியவர்களுடைய பரம அன்புக்கு நான் அருகனல்லவே என்று வருந்தினான்.

கடிதங்களை யெல்லாம் பத்மநாப அய்யர் வைத்தியநாதனுக்குக் காட்டினார். "வைத்தியநாதா! அண்ணா உன்னை ஊருக்கு வரும்படி எழுதியிருக்கிறாரே! இப்பொழுது போக வேண்டு மென்று இஷ்டமிருக்கிறதா! இன்னும் சில நாள் இங்கேயே இருந்து விட்டுப் போனால் நன்றாயிருக்கும்" என்றார்.

"எனக்கும் இங்கு இன்னம் கொஞ்சநாள் இருக்கவேண்டுமென்று ஆசையாயிருக்கிறது; தாங்கள் கூடிய சீக்கிரத்தில் நான் ஊருக்கு வருவதாகக் கடிதம் அப்பாவுக்கு எழுதுங்கள்" என்று வைத்தியநாதன் சொன்னான்.

அன்றையதினம் சாயந்திரம் வைத்தியநாதன், "சஞ்சீவி, என்னை ஊருக்கு வரும்படி அவ்வளவு அக்கறையாய் எழுதி யிருக்கிறார்களே நான் அங்கேபோய் என்ன செய்யப் போகிறேனோ?" என்றான்.

"என்ன அப்படி சொல்லுகிறாயே! நீ அவ்வளவு சோம்பேறியா?" என்று பதிலளித்தான் சஞ்சீவி.

வைத்தி—"இத்தனை நாளாய் சோம்பேறியாய்த்தா னிருந்தேன். இனிமேலும் அப்படி யிருக்க இஷ்டமில்லை."

சஞ்சீவி—"அப்படியானால் என்ன செய்யப் போகிறாய்?"

வைத்தி—"தினந்தோறும் ஏதாவது நல்லது செய்கிறது என்று மணியைக்குறித்து தினக்குறிப்பு (Time Table) எழுதியிருக்கிறேன்; அதை உனக்குக் காட்டுகிறேன் திருத்தித்தருகிறாயா?

சஞ்சீவி—"காட்டு பார்ப்போம். என்னாலானதைச் செய்கிறேன்."

ஊருக்கு வந்த முதலிலேயே சீதாராமனைப் பற்றி சஞ்ஜீவியினிடம் சொல்லி யிருந்தான். அதனால் சஞ்சீவியைப் போலவே சகோதரர்களுக்கு தினந்தோறும் மூன்றுமணி பாடஞ் சொல்லித் தருதல் என்று தினக்குறிப்பில் வைத்தி எழுதியிருந்தான். அதைச் சஞ்சீவி பார்த்ததும் "மூன்றுமணி நேரம் பாடஞ் சொல்லித் தரப்போகிறாயா? அது கஷ்டமல்லவா?" என்றான்

"சஞ்சீவி, உனக்கும் முதலில் கஷ்டமாகத் தானே இருந்தது. இப்பொழுது சுலபமாயும் சந்தோஷமாயும் இருப்பதுபோல எனக்கும் கடைசியில் இருக்குமென்று நம்புகிறேன்" என்று தாழ்ந்த குரலுடன் கூறினான் வைத்தியநாதன்

சிலநாள் கழிந்தது; வைத்தியநாதனை ஊருக்கு வரும்படி அருணாசல அய்யர் மறுபடியும் எழுதினார். அப்படியே வைத்தியநாதனும் தன் சிறிய தகப்பனார் முதலியவர்களிடத்தில் விடை பெற்றுக்கொண்டு ஊருக்குச் சென்றான்.

ஒரு மரம் சிறிய செடியாயிருக்கும்போது அதைச் சுலபமாகக் கிள்ளிவிடலாம். ஆனால்

அந்தச் செடி வளர்ந்து பெரிய மரமாகி முதிர்ந்து விட்டால் அதைச் சிறியதாயிருக்கும் பொழுது கிள்ளிப்போடாததினால் நாம் எவ்வளவு சரீரப்பிரயாசை எடுத்துக்கொள்ளவேண்டியிருக்கிறது. அதைப் போலச் சிறுவயதில் தன்னை யாரும் அடக்காமல் தன் சுயநலமே பெரிதாகக் கொண்ட ஒருவன், தன் சுயநலங் கருதாது மற்றவர்களுக்காகக் கஷ்டப்படுவதென்று எண்ணங் கொண்டால் அப்படி நடப்பது எவ்வளவு கஷ்டமென்பது யாவரும் அறிந்ததே.

வைத்தியநாதனுடைய ஸ்திதியும் இப்படித் தானிருந்தது தன் சகோதரர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் போது ஏதாவது அவர்கள் சேஷ்டை செய்வார்கள். அவைகளைப் பொறுத்துப் பாடம் சொல்லுவது அவனுக்கு மிகவும் கஷ்டமாயிருக்கும். ஆனாலும் சஞ்சீவியின் புத்திமதியை மனதாரக்கேட்டு அவன் சொற்பிரகாரம் நடந்து வந்தான். தினந்தோறும் கடவுளினிடம் பக்தி கொண்டு அவரைப் பணிந்து வந்தான். சில வேளைகளில் "நம்முடைய சுயநலத்தை நீக்கினதினாலன்றோ சகோதரன் படிக்கிறான்" என்றுமகிழ்வான். ஏனென்றால், உபாத்தியாயருக்குப் பதிலாக வைத்தியநாதன் அமர்ந்தபடியால், உபாத்தியாயருக்குக் கொடுத்து வந்த சம்பளத்தை சீதாராமனுக்குப் பள்ளிக்கூடச் சம்பளமாகக் கொடுத்தார்

சிலமாதங்களுக்குப் பிறகு பத்மநாப அய்யர் அருணாசல அய்யருடைய ஊருக்குவந்தார். வைத்தியநாதனுடைய குணம் மாறினதைக் குறித்துச் சந்தோஷப்பட்டார். அவனைப்பார்த்து ஒரு நாள் "முன்னே உனக்குப்பிரசங்கங்கள் பிடிக்காதென்று சொன்னாயே. சஞ்சீவி வாயால் பிரசங்கம் செய்யாமல் தன் நடவடிக்கையினால் பிரசங்கம் செய்தாற்போலிருக்கிறதே" என்று சிரித்துக்கொண்டு சொன்னார். வைத்தியநாதன் தலைகுனிந்தான்.

இப்பொழுது வைத்தியநாதனுடைய சகோதரன் பள்ளிக்கூட ஹெட்மாஸ்டர்வேலை பார்த்து வருகிறான். வைத்தியநாதனையும் அவன் சகோதரன் சீதாராமனையும் புகழாதார் அவ்வூரிலில்லை. மற்றவர்கள் இன்னும் வாசிக்கிறார்கள். சீதாராமனும் தான் உபந்யாசம் செய்யும் பொழுது "இவ்வுத்தம பதவியை அடைந்தது என் சகோதரனுடைய உதவியாலன்றோ" என்று சொல்வதுண்டு.

## SAMASHTI-SEVAI SADAN, OR THE SOCIAL SERVICE INSTITUTE.

*To the Editor* *

Sir, I thank you for directing attention to the discussion of "The Problem of Child-Education and the True Making of Man" in a topical number of the *Vivekachintamani* recently issued. According to Dr. Robert Duff of Glasgow whose views are eminently sane, correct and true, "the science of life has to be taught in schools and colleges to the children and students if the Social Problem is ever to be successfully tackled." People have to be interested in life instead of in money-making. The enemy of reform and progress is ignorance; people don't think clearly and many of them don't think at all. The evils of thoughtlessness are great and many. Inability to think clearly is the cause of many avoidable evils. It has yet to be recognised "that the essence of the social problem is the soul." The present methods of reform are topsy-turvy. "We try to change men by changing our machinery instead of changing men in order to lessen the complexity of our machinery." The business of education rightly followed is "self-control" or "self-government,' *i.e.*, the government of the lower-self by the higher self,—"for it is the creation of right ideas, and only right ideas can save the world." Ideas organise themselves. And if people are given to think incoherently and inconsistently, their ideas, all the same, have the same effect;—they disorganise themselves. "Education and government, in fact, have one objective, the creation of a nobler creature. All education and all government must surely fail when they loose sight of the higher nature of man." Dr. Duff's testimony to the Universal experience of the spiritual East is highly valuable. He says: 'Experience convinces me you may do much harm by looking after the poor in the spirit of an inspector. You blunt their finer perceptions; you intrude upon their natural privacy; you tend to destroy their sense of responsibility.

* *Madras Mail, Madras Times, Madras Standard, Indian Patriot, Hindu.*

Perhaps this reaction from the policy of doing nothing at all is wearing itself out. Interference and even education have produced disappointment. The Social Problem remains. It is still a baffling problem and its proportions are enormous.

This is as true of the state of things in India as it is on the conditions in England. To rightly tackle the Social Problem, therefore, is and must be the earnest endeavour of all systems of education and all governments. Individual citizens have as much responsibility in this matter as corporate bodies. For in the soul of the corporate bodies is "the essence of Social Problem," and that soul "is the soul of every individual composing humanity. To serve that soul must be the end and aim of human life. That is what we in the East call *Samashti-sevai* and those in the West like Dr. Duff call Social Service. The Children's Movement recently inaugurated by their Excellencies Lord and Lady Hardinge has found a new phase of expression in that it has led to the founding of a Social Service Institute for the training of children in the elevating ideals of social service. I appeal to the support of all right thinking men in the cause.

LALITALAYA, MYLAPORE, 30*th*, *March*. — C. V. Swaminatha Iyer, *Editor, Vivekachintamani.*

## THE PROBLEM OF CHILD-EDUCATION

"In the February issue of the *Vivekachintamani*, that progressive Tamil monthly devoted to the "Children's Movement," the Editor discusses in a topical number "the problem of child education or the true making of man." He starts with Lord Hardinge's dictum on the necessity of "so bending the educational systems that the education given may be that best calculated to fit them (the children) for their various careers." The character and well-being of the students must occupy the most prominent place in the attention of parents and teachers whose combined influence and co-operation alone will help to give that tone of reality to the education given so necessary in the formation of the child-mind and the building up of character. In the inculcation of ideals of social service Swami Vivekananda asserts that "nothing else is necessary but these—love, sincerity and patience." The strenuousness of life must be impressed on the child-mind when it is intuitively active and responsive to its own environments. The fascination of money-making as incentive to achievements of success in the business of the world must be shielded against and the enchanting ideal of love as the only thing that pays and of character as the only motive power "that cleaves its way through adamantine walls of difficulties" must be taught by practice and precept during the most impressionable period of the child's mind.

As a means of attaining this consummation in the education of the child-mind, the Montessori system is briefly but clearly discussed with a view to determine the economic value of education which, to quote a writer on the subject to the *London Times* "is a greater efficiency on the part fo everyone and a higher appreciation of the value of labour in all directions." The highest teaching of the Gita is Karma-Yoga which, in the language of the West, is nothing more than the realisation of "the essential fact that it is our duty to work most of our lives and work well. This in sooth is the great boon of child-education which is the true making of man. The bearing of the subject in connection with Village life and Village education or nature study, is also fully discussed in several articles of exceeding value and interest. Even the sacrifice of Suchalata and the "short story" column are pressed into service to teach the value of home education and healthy home influences in the formation of the child-mind.—*The Madras Dailies.*

---